

கவிஞர்

## கே. பி. அறிவானந்தம்

குடியாத்தம் பழனிச்சாமி, பார்வதி தம்பதிகளின் மூத்த புதல்வராக 1942, ஏப்ரல், 22-ந் தேதி பிறந்தார் கவிஞர் கே. பி. அறிவானந்தம். அவ்வூரின் வேதாந்த பாடசாலை என்கிற குருகுலத்தில் தமது ஞான 'அகர'த்தைத் தொடங்கினர். தவத்திரு சண்முகானந்த சுவாமி அவர்களின் அன்புக்குப் பாத்திரமான மாணவராய் விளங்கினர்.

குருகுல வாசம் முடிந்ததும் தமது பன்னிரண்டாவது வயது முதல் தமிழகத்தின் புகழ் வாய்ந்த நாடக சபாக்களில் சேர்ந்து, கலைத் தொண்டாற்றினர்.

1962 முதல் பத்திரிகைகளிலும், வானொலிகளிலும் கவிதைகள் எழுதி வருகிறார்.

# நாகேசுவரர் நான்மணிமாலை

கவிஞர் கே. பி. அறிவானந்தம்

அருள்மிகு நாகேசுவரசுவாமி
திருக்கோயில் வெளியீடு
குன்றத்தூர், சென்னை-600069.

அருள்மிகு நாகேசுவர சுவாமி

திருக்கோயில் அறங்காவலர்கள்

# பதிப்புரை

''உலகெலாம்'' எனத் தில்லை அம்பலவாணன் அடி யெடுத்துக் கொடுக்கப்புராணங்களிலேயே பெரியபுராணத்தை இயற்றிய சேக்கிழார் பெருமான், நமது திருக்கோயிலின் மூலவரான சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து ''நாகேசு வரர்'' என்று பெயர் சூட்டி, இவ்வூருக்கு ''வடதிருநாகேசு வரம்'' எனவும் பெயரமைத்து மகிழ்ந்தார்.

இன்று இத்திருக்கோயிலின் நிர்வாகத்தை நடத்தும், அறங்காவலர்களாகப் பொறுப்பேற்றிருக்கும் நாங்கள், இத் திருக்கோயிலின் வரலாறு முறையாக எழுதப்படவேண்டும், இங்கு வீற்றிருக்கும் திருநாகேசுவரர் மீது பாமாலைகள் புனையப்படவேண்டும் என்று விரும்பினோம். இதையே எங்கள் முதற்பணியாகவும் ஏற்றுக் கொண்டோம்.

பூமியிலே மறைந்து கிடக்கும் தங்கம்போல் இவ்வூரிலேயே வாழ்ந்தும், இங்கிருப்பவர்களால் அறிந்து கொள்ளப்படாத வராக இருந்தார் கவிஞர் கே. பி. அறிவானந்தம். அவரை நாங்கள் சந்தித்தபோது, அவரிடமிருந்த பல்வேறு ஆற்றல் களைக் கண்டு ஆச்சரியமடைந்தோம்.

எழுதுகிறவர்கள் எல்லோருமே கவிஞர்களாயிருப்பதில்லை. கவிஞர்களாயிருப்பவர்கள் எல்லோருமே சிறந்த நாடக ஆசிரி யர்களாக ஏற்கப்படடதில்லை. சிறந்த நாடக ஆசிரியர்கள் சிறந்த பேச்சாளர்களாக அமைவதில்லை. சிறந்த பேச்சாளர் களோ, சிறந்த ஆன்மீக தத்துவஞானம் கொண்டவராயிருப்ப தில்லை.

கவிஞர் அறிவானந்தமோ, எழுத்தாளராய் கவிஞராய் நாடகாசிரியராய், நாவலராய், இறைஞானவேட்கை கொண்ட வராய் விளங்குகிறார். அவரது கவிதைகள் பல பத்திரிகை

களிலும், வானொலி நிகழ்ச்சிகளிலும் இடம் பெற்றுள்ளன. நாடகக்காவலர் R. S. மனோகரின் நாடக மன்றத்தில் அவர் எழுதிய இந்திரஜித், ''பரசுராமர்''ஆகிய நாடகங்கள் நடத்தப் பட்டு வருகின்றன. பல இலக்கிய, சமயக்கூட்டங்களில் அவர் சொற்பொழிவாற்றியுள்ளார்.

இந்த வித்து குடியாத்தம் வேதாந்த பாடசாலையின் ஞானக்களஞ்சியத்திலிருந்து வந்தது என்பதை அறிந்தபோது ''அப்படியா'' என்று ஆச்சரியமும், ''அதுதானே ''என்று நிறை வும் கொண்டோம்,

ஆதலால், அவரை நமது தேவஸ்தானத்தின் ஆஸ்தானக் கவிஞராக ஏற்றுக்கொண்டு, திருக்கோயிலின் தலவரலாற்றை எழுதி, திருநாகேசுரர்மீது பாமாலை இயற்ற வேண்டும் என்று வேண்டிக் கொண்டோம். கவிஞரும் அதைப் பெருமிதத்தோடு ஏற்றுக் கொண்டு, ''நாகேசுவரர் நான்மணிமாலை'' என்னும் பிரபந்த நூலை இயற்றித் தந்தார்.

வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம் ஆசிரியப்பா எனும் பாக்களால் இயற்றப்பட்டுள்ள இந்த நூலில், விருத்தத்திற்குள்ளேயே அறுசீர், எழுசீர், எண்சீர், பதினன்கு சீர், சந்தவிருத்தங்கள் எனப் பலவகை விருத்தப் பாக்கள் பயன்படுத்தப்பட்டிருப்பதோடு, ஆசிரியப்பாவிலும் நேரிசை, இணைக்குறள், நிலைமண்டிலம் ஆகியவை இடம் பெற்றுள்ளன. ''உணரு மடியவர் மனதினில்'' ''பதியென லிதுவென'' எனவரும் சந்தங்கள் தாளக்கட்டுடன் அமைந்து மீண்டும் மீண்டும் படிக்கத் தூண்டுகின்றன.

இந்த நூலின் சிறப்பையும், இதற்குப் பெருமகிழ்வோடு சான்றோர் பலர் வாழ்த்துரை வழங்கியதையும், கண்டு மகிழ்ந்த நாங்கள் இந்த நூலை விரிந்த அளவில், சிறந்த முறையில் பதிப்பதெனத் தீர்மானித்தோம்.

இதையறிந்த கவிஞரோ அப்பனைப் பாடிய எனக்கு அம்மையைப் பாடவும் இடமளித்தீர்கள் என மகிழ்ந்து நமது

தலத்தில் எழுந்தருளியிருக்கும் காமாட்சியம்மை மீது "காமாட்சி இரட்டைமணி மாலை" பாடினர். அதைத் தொடர்ந்து நமது திருக்கோயிலின் க்ஷேத்திர விநாயகர் மீது "விநாயகர் திருத்தொகை"யும், சுப்ரமணியர் மீது! "சுப்பிரமணியர் திருப்பள்ளி எழுச்சியும்" சேக்கிழார் பெருமான் மீது "சேக்கிழார் ஆற்றுப் படை'யும் பாடியுள்ளார்.

இவற்றுள் எதையும் இது இதைவிடச் சிறப்பாக உள்ளது என்று பிரித்துப்பார்க்க முடியாதபடி, ஒவ்வொன்றும் அற்புதமாக அமைந்துள்ளன.

நமது திருக்கோயிலின் தலவரலாற்றை தெளிந்த நீரோடை போன்ற உரைநடையில் சரித்திரச் சான்றுகளோடு விரிவாக எழுதியுள்ளார். கோயில்கள் உருவான வரலாற்றிலிருந்து தொடங்கி, "சேக்கிழார் பிள்ளைத்தமிழ்" "சேக்கிழார் புராணம்" ஆகியவற்றிலிருந்து ஆதாரங்களை சுட்டிக்காட்டி நமது திருக்கோயில் மூலவருக்கு சேக்கிழார் ஏன் நாகேசுவரர் என்று பெயரிட்டார் என்பதை விளக்கி, சைவத்திற்கும் செங்குந்த மரபினருக்கும் உள்ள தொடர்பை ஆழ்ந்த கண்ணோட்டத்தோடு குறிப்பிட்டு சிறப்பான முறையில் எழுதியுள்ளார். நமது திருக்கோயிலைப் பற்றித் தெரிந்துகொள்ள விரும்பும் ஒவ்வொருவருக்கும், இந்தத் தலவரலாறு ஓர் ஆதார நூலாக விளங்கும்.

இந்த நூலுக்கு மனநிறைவோடு ஆசி வழங்கியருளிய தருமையாதீனம் குருமகாசந்நிதானம் சுவாமி அவர்களுக்கும், சாற்றுக்கவிதந்து பெருமைப்படுத்திய உயர்திரு அருள்மொழி அரசு திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள், வாகீச கலாநிதி கி. வா. ஜகந்நாதன் அவர்கள், தமிழக அரசவைக் கவிஞர் கண்ணதாசன் அவர்கள் ஆகியபெருமக்களுக்கும், வாழ்த்துரை தந்து எங்களின் அன்புத் தந்தையாகவும், தலைவராகவும் விளங்கும் திருநாகேஸ்வரம் நாட்டார் தேவராஜ முதலியார் அவர்களுக்கும், எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

டெல்லி பல்கலைக்கழகத் தமிழ்ப்பேராசிரியர் க. ஆறு முகனார் அவர்கள், தமது பல்வேறு பணிகளுக்கிடையில் நாகேசுவரர் நான்மணிமாலையை முழுமையாகப் பார்வை யிட்டு இந்தக் கவிதைகளில் உள்ள சுவைகளையும், நுணுக்க மான தத்துவக் கருத்துக்களையும் ஆழ்ந்து அனுபவித்து விரி வான முறையில், ஓர் ஆராய்ச்சிக் கட்டுரையாகவே தமது மதிப்புரையை வழங்கியிருக்கிறார். அவருக்கு எங்கள் அன் பான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூலை அழகாகவும், விரைவாகவும் அச்சிட்டுத் தந் தார் மக்கள் அச்சக உரிமையாளர் டாக்டர் மே. து. ராசுகுமார் அவர்கள். அழகிய வண்ண அட்டைப்படமாக முகப்பு ஓவி யத்தை வரைந்து தந்தார் ஓவியர் ஆனந்தன் அவர்கள். இவர் களுக்கும் "ரெக்ஸன்ஃபிரீ" அதிபர் திரு ராஜாராம் அவர் களுக்கும் எங்கள் மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூலை திருநாகேசுவரர் தேவஸ்தானத்தின் முதல் வெளியீடாக, மெய்யன்பர்களுக்குப் பெருமகிழ்ச்சியுடன் சமர்ப்பிக்கின்றோம்.

அருள்மிகு நாகேசுவர சுவாமி திருக்கோயில்

திருவாளர். T. M. **நாகலிங்க முதலியார்**

நிர்வாக அறங்காவலர்

திருவாளர். K. **குப்புசாமி முதலியார்**

,, T. K. **சம்பந்த முதலியார்**

,, T. K. **கணேச முதலியார்**

அறங்காவலர்கள்

## அறங்காவலர்கள்



| T. K. சம்பந்தம் | T. M. நாகலிங்கம் | K. குப்புசாமி | T. K. கணேசன் |
|---|---|---|---|
| (அறங்காவலர்) | (நிர்வாக அறங்காவலர்) | (அறங்காவலர்) | (அறங்காவலர்) |

குருபாதம்

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனம்
26-ஆவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்**



தருமபுரம்
மயூரம் (அஞ்சல்) 609 001
16-2-1981

"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே"

தமிழக வரலாற்றில் மன்னர் ஆட்சிக் காலத்தில் மன்னர்களும், அமைச்சர்களும், பிற அரசுப் பணியாளர்களும் பக்தி மிக்கவர்களாகவே விளங்கியிருந்திருக்கின்றனர். இதனால் சமூகத்தில் பண்பாடும், அமைதியும் நிலவின. பாண்டிய மன்னர்களின் முதலமைச்சராகத் திகழ்ந்த மாணிக்கவாசகர், சோழர்களின் முதலமைச்சராகத் திகழ்ந்த சேக்கிழார் போன்றவர்கள் குறிக்கத்தக்க அருளார்ந்த அமைச்சர்கள்.

தொண்டைநாட்டுச் சான்றோராகிய சேக்கிழார் சோழநாட்டின் முதலமைச்சராகத் திகழ்ந்த காலத்தில் காவிரித் தென்கரைத் தலங்களுள் ஒன்றாகிய திருநாகேச்சுரத்துப் பெருமானிடம் ஈடுபாடு கொண்டார். அதன் நினைவாகச் சென்னையை அடுத்த குன்றத்தூரில் இவர்களால் எடுப்பிக்கப்பெற்ற திருக்கோயிலே வட திருநாகேச்சுரத்தில் திகழும் அருள்மிகு நாகேஸ்வர சுவாமி திருக்கோயில். வரலாற்றுப் பின்னணி மிக்க இக்கோயிலின் தலவரலாறு இதுநாள் வரை முறையாக எழுதப் பெறாதிருந்த குறை நீங்கும் வண்ணம், இத்தல வரலாறு தக்க ஆதாரங்களோடு முறையாக எழுதப்பெற்று வெளியிடப்பெறுவது மகிழ்ச்சிக்குரியது.

தமிழக மக்களின் வாழ்வியல் பெருமிதங்களை வடித்து வழங்கும் பண்பாட்டுக் காப்பியம் பெரியபுராணம். இதன் ஆசிரியர், அவர் வழிபட்டதலம், இவற்றின் பல்வேறு சிறப்

புக்கள் இவைகளை விளக்கிக் கூறும் எளிய இனிய "நாகேசுவரர் நான்மணிமாலை" என்ற சிற்றிலக்கியம் ஒன்றும் தேவஸ்தான வெளியீடாக வருவது பாராட்டத்தக்கது. இதனைப் பக்தியும் பண்பும் கொண்ட இளைஞர் கே. பி. அறிவானந்தம் ஈடுபாட்டுடன் இயற்றியுள்ளார். தலவரலாறும் நான்மணி மாலையும் மக்களுக்குப் பயன் நல்கவும், நூலாசிரியர் மேன் மேலும் நலம்பல பெற்று நீடுவாழவும், இதனை வெளியிடும் பேரன்பர்களுக்குத் திருவருள் பெருகவும் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.



வேலை வணங்குவதே வேலை

**கிருபானந்தவாரியார்**

107, சிங்கண்ணசெட்டித்தெரு
சிந்தாதிரிப்பேட்டை. சென்னை

**சாற்றுக்கவி**

**நேரிசை வெண்பா**

**திகழ்அறி வானந்தம் செய்யநா கேசப்**
**புகழ்மணி மாலை புதிதாய். தகவுடனே**
**செந்தமிழில் செப்பினர் தித்திக்கும் தேனுக**
**சந்ததமும் வாழ்க தழைத்து !**

கிருபானந்தவாரி



கி. வா. ஜகந்நாதன்.

காந்தமலை,
2, நார்ட்டன் முதல் தெரு,
சென்னை-600028.

சேக்கிழார் எனும்பெரிய புலவரருள் புராணத்தைத்
தெய்வி கச்செம்
பாக்கிழார் எனயாரும் போற்றும்வகை அருள்செய்தார்
பண்டை நாளில்
தேக்குபுகழ்ச் சிவபிரான் புராணமெலாம் சிறியனவாச்
செய்த தாலே
நோக்கரிய அந்நூலைப் பெரியபுரா ணப்பேரால்
நுவல்வர் சான்றோர்.

நாயன்மார் தம்சரிதை நுவன்றஅவர் இறைவன்பால்
நயந்து சோணாட்
டேயதிரு நாகேசம் எனும்தலம்போல் தொண்டைநாட்
டினிலே ஒன்றை
ஆயபெரும் பக்தியுடன் அமைத்திட்டார் அத்தலத்தில்
அமைசெங் குந்தர்
மேயவிருப் புடனந்தத் திருக்கோயில் தனைமேலாய்
விழைந்தார் அம்மா,

பலபலவாம் திருப்பணிகள் செய்தந்தக் கோயிலினைப்
பாரோர் போற்றி
இலகும்வகை செய்தனரால்; அதன்பெருமைதனையறிந்தே
எழில்கொள் பாவால்
கலையறிந்த அன்பர் அறி வானந்தம் நான்மணிகள்
கவின நன்றாய்
உலவுபுகழ் மாலைதனை இயற்றினர் தலவரலா
றுரைத்திட் டாரே....

தலங்களைநன் கேவணங்கி நலம்பெற்ற பெரியோர்கள்
தமிழ்நாட் டின்கண்
அலகிலராம்: அக்கோயில் களிற்பணிசெய் தமைந்திட்ட
அரசர் பல்லோர்;
கலைமலியும் அக்கோயில் பலவும்இந்தத் தமிழ்நாட்டிற்
கவினைச் சேர்க்கும்;
குலவுமவற் றின்வரலா றறிவதுவும் பக்திதனைக்
கூட்டு மன்றே....

அறிவானந் தப்பெயரார் தாமியற்றும் மாலையினை
அவர்வ ரைந்த
செறிவாரும் தலவரலாற் றினைத்தமிழர் படித்தறிந்தால்
சிவத லத்தின்
முறிவாராப் பெருமையெலாம் உணர்வார்கள்: இந்நூல்கள்
முருகன் செய்யும்
குறியாரும் திருவருளால் எங்ஙணுமே பரவியிசை
கொள்க மாதோ.

கி. வா. ஜகந்நாதன்

12-1-81



**கண்ணதாசன்**
அரசவைக்கவிஞர்

**விசாலாட்சி இல்லம்**
12. ஹென்ஸ்மென் ரோடு
தி. நகர். சென்னை-17

**வடதிருநா கேசுவரர் பெருமை பற்றி**
**வளர்தமிழ் உயர்கவிஞர் அறிவா னந்தம்**
**கடனமிடும் திருப்பாடல் வனைந்து வைத்தார்**
**நாடியவர் வினைதீர்க்கும் நல்ல தெய்வம்**
**திடமாக ஈதெனவே செப்பு கின்றார்**
**தெளிகின்றோம் நாம்சென்று வணங்கு கின்றோம்**
**கடன்தீர வினைதீர இந்தக் கோயில்**
**கடவுளினை வணங்கிடுவீர் கவலை தீரும்!**

திருநாகேஸ்வரம் நாட்டார் உயர்திருவாளர்
T.K.M. தேவராஜ முதலியார் அவர்கள் வழங்கிய

# வாழ்த்துரை



"நாகேசுவரர் நான்மணி மாலை" என்ற இந்தக் கவிதை நூல் தன்னுள் "காமாட்சி இரட்டைமணிமாலை" முதலான சிற்றிலக்கிய வகைகளைப் பெற்று இனிய சந்தங்கள், எளிய சொற்கள், அழுத்தமான கருத்துக்களுடன் சிறப்புற்று விளங்கு கிறது.

சமயத் துறையிலும் இலக்கியத் துறையிலும் சிறந்து விளங்கும், தகுதி வாய்ந்த பெருமக்கள் இதைப் பாராட்டியுள் ளனர். இதற்குமேல் இந்தக் கவிதைகளைப் பற்றி நான் சொல்லவேண்டியது ஏதுமில்லை.

இந்தக் கவிதைநூலில் நமது வடதிரு நாகேசுரத்தின் தல வரலாறு மிகச் சிறப்பாக அமைந்துள்ளது.

பனிரெண்டாம் நூற்ருண்டில் சேக்கிழார் பெருமானுல் நிறுவப்பட்டு, செங்குந்த மரபினரால் பரிபாலிக்கப்பட்டுவரும் இத்திருக் கோயிலின் சிறப்பு, இந்தத் தலவரலாற்றில் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது.

சேக்கிழார் பெருமான் ஏன் இத்திருக்கோயில் பரிபாலனத்தைச் செங்குந்த மரபினரிடம் தந்தார் என்பதற்கு ஆசிரியர் குறிப்பிடும் தெளிவான காரணம், ஆராய்ச்சியாளர்கள் யாவரும் ஏற்றுக்கொள்ளும் வகையில் அமைந்துள்ளது.

செங்குந்தர்குல சிரேஷ்டரான ஒட்டக்கூத்தரின் வீரஞ் செறிந்த கம்பீரமான கவித்துவ வாழ்க்கை வரலாறு விரிவாக விளக்கப்பட்டிருக்கிறது. கூத்த முதலியாருக்கும், சேக்கிழார் பெருமானுக்கும் இருந்த ஞான உறவு அருமையாக விளக்கப் பட்டிருக்கிறது.

இந்த வரலாற்றை சரித்திரக் கண்ணேட்டத்தோடு, யாவரும் படித்து ரசித்து உணரும் வகையில், சரளமான உரை நடையில் எழுதியுள்ளார் இதன் ஆசிரியர் அறிவானந்தம்.

இந்த நூலே இயற்றுவித்ததின் மூலம் வடதிருநாகேசுவரத்தின் பெருமையை யாவரும் உணரும் வண்ணம் செய்து, இத்திருக்கோயில் வரலாற்றில் தனக்கென ஒரு நிலேயான புகழைப் பெற்றுவிட்டார் நிர்வாக அறங்காவலர் டி. எம். நாகலிங்க முதலியார்.

இந்தக் கவிஞரை கண்டெடுத்து இத்தேவஸ்தானத்திற்கு அறிமுகப்படுத்தி, இந்த நூல் உருவாவதற்க்கு காரணமாய் அமைந்ததின் மூலம் தானும் அந்தப் புகழில் சமபங்கு பெறுகிருர் கே. குப்புசாமி முதலியார்.

கவிஞரை வாழ்த்துகிறேன்.
அறங்காவலர்களேப் பாராட்டுகிறேன்.

கி. கெ. மா. இரவாந்தன



**தில்லிப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர்**

**புலவர், டாக்டர், கி. ஆறுமுகனார் எம்.ஏ.,எம்.லிட்**

**பி.எச்.டி., அவர்கள் வழங்கிய**

# மதிப்புரை

''தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே'' என வியந்து பாடுகிறார் ஔவையார். அங்ஙனம் சொல்லவும் பெரிதாகிய தொண்டர் பெருமைகளைப் பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடி எழுதித் தந்தவர் சேக்கிழார் பெருமான். தமிழிலக்கியக் களஞ்சியத்துள் மணியெனத் திகழும் திருத்

தொண்டர் புராணம் பாடிய சேக்கிழார் நிறுவியது வடதிரு நாகேசுவரம். அத்திருநாகேசுவரத்தில் எழுந்தருளிய இறைவன் காமாட்சி சமேதராய்த் திகழும் நாகேசுசுவரர்.

முத்து, பவளம், மரகதம், மாணிக்கம் ஆகிய நால்வகை மணிகளைக் கோத்து அமைந்த நான்மணிமாலை என்னும் மாமணிமாலை காண்போர் கண்ணுக்கு இன்பம் பயப்பதாகும். இங்ஙனமே வெண்பா, கட்டளைக்கலித்துறை, ஆசிரியவிருத்தம், ஆசிரியப்பா என்னும் நால்வகைப் பாக்களை விரவி அமைத்த நான்மணிமாலை என்னும் பாமணி மாலை கற்போர் நெஞ்சிற்கு உவகை தருவதாகும். இத்தகைய நான்மணி மாலை ஒன்றை ஆக்கி வடதிருநாகேசுவரத்தில் காமாட்சி சமேதராய் எழுந்தருளிய நாகேசுவரருக்கு அணிவித்து மகிழ்கின்றார் நம் கவிஞர் அறிவானந்தர்.

நாற்பது பாடல்களாலாகிய நாகேசுவரர் நான்மணிமாலையைப் பிறர்எவரும் படித்து இன்புறுவதற்கு முன்னர் அடியேன் படித்துச் சுவைத்து மகிழும் வாய்ப்பினை அளித்த அக் கவிஞர்க்கு என் நன்றி.

கவிஞரின் சொற்சுவையும் பொருட்சுவையும் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. சேக்கிழார் எழுந்தருளுவித்த நாகேசுவரரைப் பாடத் தொடங்கும் கவிஞர் அச்சேக்கிழாரையே தமது வழிபடு தெய்வமாகக் கொண்டு வணங்கி நூலைத் தொடங்குகிறார். அச்சேக்கிழார் பெருமானது திருத்தொண்டர் புராணத்தின் முதலையே தமது நூலுக்கும் முதலாக்கி "உலகெலாம்" என்றே கவிஞர் தொடங்குவது அவர் சேக்கிழார்பால் கொண்ட பக்தி மிகுதியைப் புலப்படுத்துகின்றதெனலாம். சைவம் தழைக்க விண்ணில் எழுந்து ஒலித்த "உலகெலாம்" என்னும் அவ்வொலியை நினைந்து, சேக்கிழார் தம் திருவடிகளை வணங்கித் தொடங்கும் கவிஞரின் முதற் கவிதை இதோ;

**உலகெலாம் என்றே ஒலித்தது விண்ணில்**
**தலமெலாம் சைவம் தழைக்க-நிலமெலாம்**

**போற்றுதிருத் தொண்டர் புராணமருள் சேக்கிழார்**
**ஏற்றமிகு தாள் பணிவோம் இங்கு**

என்னும் இப்பாமணி நாற்பது மணிகளடங்கிய ''நாகேசுவரர் நான்மணிமாலை''யின் முதல் மணியாகும்.

**குனித்த புருவமும் கொவ்வை பச்செவ்**
**வாயிற் குமிண்சிரிப்பும்**
**பனித்த சடையும் பவளம்போல்**
**மேனியிற் பால்வெண் ணீறும்**
**இனித்தம் உடைய எடுத்தபொற்**
**பாதமும் காணப் பெற்றால்**
**மனித்தப் பிறவியும் வேண்டுவ**
**தேயிந்த மாநிலத்தே**

எனக் கூத்தப்பெருமானின் பேரழகைக் கண்டு இன்புறும் மனித்தப் பிறவியை வேண்டுகிறார் நாவரசர். வடதிரு நாகேசனை வாழ்த்தி வணங்கும் பேறுபெற்ற தமது மனிதப் பிறவி இழிபிறவியன்று, தேவரினும் மூவரினும் உயர்ந்த பிறவியேயாகும் எனப் பெருமிதமுற்று மகிழ்கின்றார் கவிஞர் அறிவானந்தர்.

**யானோர் இழிபிறவி யாகயான் என்னையே**
**ஏனோ உரைப்பதினி இப்புவியில் ?- வானோரும்**
**வாழ்ந்தென்றும் போற்றும் வடதிரு நாகேசுரனைத்**
**தாழ்ந்தண்டித் தாள்பணிவ தால்!**

என்பது நாகேசுரர் நான்மணிமாலையில் ஒளிவீசித் திகழும் மற்றொரு மணிப்பாட்டு.

இலட்சக் கணக்காகச் செலவிட்டுக் கட்டிய பணக் கோயிலில் காணும் இறைவனைத் தம் மனக் கோயிலில் எழுந் தருளுவித்து வாழ்த்தி வணங்கும் ஞானியர்தம் பக்தி மேம் பாட்டைப் பூசலார் நாயனார் புராணத்தில் புலப்படுத்துகிறார் சேக்கிழார் பெருமான். அந்நிலையை எண்ணி

**வாழ்வதுநீ குன்றத்தூர் தன்னில் மட்டுமா எங்கள்**
**மனக்கோயில் தனிலு மன்றோ?**

எனப்பாடி, மன்பதையின் மனத்தையெல்லாம் மாதேவன் வாழும் திருக்கோயிலாக்க வேண்டுகிறார் நம் கவிஞர்.

தீயோரை அடக்கி ஒடுக்கி, அடியவரை வாழ வைக்கும் இறைவனது ஆற்றல் அளவிடற்கரியதாகும். அடியவர்க்குக் கொடுமை இழைக்கும் அக்கொடியவரை அடக்குதற்கு அப்பெருமானுக்கு எவர் துணையும் தேவையில்லை; எப்படையும் தேவையில்லை. அனலேந்தி ஆடும் பெருமான் அந்த அனலைக் கொண்டா திரிபுரத்தைச் சுட்டெரித்தான்? சூலாயுதத்தைத் தாங்கிய சங்கரன் அவ்வாயுதத்தாலா எமனைச் சாய்த்தான்? இறைவனின் கரத்தில் உள்ள மழுப் படையா இராவணனது பத்துத் தலைகளையும் இருபது தோள்களையும் நறநறவென நொறுக்கியது? இவ் வினாக்களுக்கு என்ன விடை?

**எரிந்தன வெள்ளிபொன் இரும்பெனும் கோட்டைகள்**
**எரித்தது நெருப்பல இறைவனின் சிரிப்பே**
**சரிந்தன இயமனின் சூலமும் பாசமும்**
**சாய்த்தது படையல சங்கரன் பதமே**
**நொறுங்கின இராவணன் தலைகளும் தோள்களும்**
**நொறுக்கிய திறைவனின் ஒருபெரு விரலே**

என இலக்கியச்சுவை பொங்க இறைவனின் சிரிப்பும், பதமும், விரலும் ஆகியவற்றின் பேராற்றலைப் போற்றிப் பாடுகிறார் அறிவானந்தர்.

இறைவன் எங்கும் எல்லாப் பொருள்களிலும் பரந்து விரிந்து உறைந்து நிறைந்து நிற்பவன்.

**காடுங் காவும் கவின்பெறு துருத்தியும்**
**யாறுங் குளனும் வேறுபல் வைப்பும்**
**சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்**
**மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்**

இங்ஙனம் அண்டங்களில் உள்ள எல்லா இடங்களிலும் வாழ்பவன் இறைவன். அவ்வண்டங்களில் அடங்காமல் கடந்தும் நிற்பவன் அவன். இங்ஙனம் அண்டங்களிலும் அடங்காத அவன் ஒரு சிறிய சொற்றொடரில் அடங்கி அமைவான். அச்சொற்றொடர்தான் சிவாயநம என்னும் ஐந்தெழுத்தருமறை. அவ்வைந்தெழுத்தை ஓதி வழிபட்டு, அண்டங்களிலும் அடங்காத அவ்விறைவனை உணரவேண்டும் என்று தம் மனத்தினை வேண்டுகின்றார் கவிஞர்.

> .... .... .... ... .... .... .... .... **பெருமண்டம்**
> **யாவும் அடங்காமல் ஐந்தெழுத்தில் தானடங்கி**
> **மேவும் இறைவனைநீ வேண்டு!**

இங்ஙனம் எல்லா அண்டங்களிலும், அவ்வண்டங்களைக் கடந்தும் விரிந்து நிற்கும் இறைவனை நாம் தேடிக்காண இயலுமா? தேடியலைந்தால் அவன் நம் எதிரில் தோன்றுவானா? எங்கும் தேடியலைந்தாலும் அவ்விறைவனைக் காண இயலுமா?—இயலாது இயலாது இயலாது. பின் எவ்வாறு அவனைத் தேடிக் கண்டு தொடர்வது? திருமாலும் நான்முகனும் தேடிக்காணாத அவ்விறைவனை, நீ உன் முயற்சியால் தேடவும் இயலாது. கண்டு தொடரவும் இயலாது. அவனே உன்னைத் தேடி அலைகிறான். நீ அவனை விட்டு விலகி எங்குச்சென்றாலும் அவன் உன்னை விடாமல் தொடர்ந்து உன்னைப்பற்றி, உன் மனத்தைப்பற்றித், தன் பேரருளைப் பொழிய முற்படுவான். அங்ஙனம் அவன் அருள்பெற்றபின் அவனை நீ உணர்வாய். உணர்ந்து அவன் திருவடிகளைக் காண்பாய். கண்டு வணங்குவாய். வணங்கிப் பேரின்பத்தில் திளைப்பாய். இவ்விறைத் தத்துவத்தை "அவனருளாலே அவன் தாள் வணங்கி" எனச் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பார் மணிவாசகப் பெருந்தகையார். மணிவாசகரது இந்தத் தத்துவத்தை, விரித்துக் கூறி விளங்கவைக்கிறார் கவிஞர். இதோ அத்திருவாசக விளக்கம்;

> **இறைவனைத் தேடியான் எங்கும்**
> **அலைந்தேன் எதிரிலிலை**

**இறைவ னெனத்தேடி எங்கும்**
**தொடர்வதை எண்ணவில்லை**

என்பது கவிஞரின் கழிவிரக்கத் திருப்பாடல்.

**தன்னையே இழந்து தலைவன்**
**அருளெனத் தானுணர்ந்தால்**
**வினைகள் அகலும் விளைவும்**
**தெரியும்..........**

என்னும் பாடற்பகுதியும் அத்திருவாசகத் தத்துவத்தை விளக்குவதேயாகும்.

யான் எனது என்னும் தன்முனைப்புணர்ச்சிகளை ஒழித்து, எல்லாம் அவனருளே என்பதை உணர்ந்தால் வினைகள் நீங்கும். வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவனை உணரும் பயனை எய்தி மகிழ இயலும் எனக் கவிஞர் இப் பாடலால் உணர்த்தும் உண்மை உணர்ந்து இன்புறத்தக்க தாகும்.

இறைவன் பாலுள்ள கனியைப் பெறுதற்கு மூத்தபிள்ளை யாரும் இளைய பிள்ளையாரும் கொண்ட முயற்சியில் காணும் தத்துவத்தையும் கவிஞர் எடுத்துக் காட்டுகிறார். ''இறைவன் உலகில் எங்கும் எப்பொருளிலும் நிறைந்துள்ளான். இறைவ னுள் உலகும் உலகப் பொருள்கள் அனைத்தும் நிறைந்துள் ளன.'' இளையோனாகிய ஆறுமுகன் மயில்மீதேறி உலகைச் சுற்றி வந்தமை உலகில் எங்கும் நிறைந்துள்ளான் என்னும் இறைத்தத்துவத்தைக் காட்டுவதாகும். மூத்த பிள்ளையாராம் ஆனைமுகன் உலகைச் சுற்றாமல் இறைவனைச் சுற்றி வந்தமை அவ்விறைவனுள் ''உலகம் முழுதும் அடங்கியுள்ளது'' என் னும் கடவுள் தத்துவத்தைக் காட்டுவதாகும்.

**நித்தியன் உலகில் எங்கும்**
**நிறைந்துளான் என்று காட்ட**
**அத்தினம் மயில்மேல் எம்மான்**
**அகிலத்தைச் சுற்ற லானான்**

**உத்தமன் தனக்குள் எல்லா**
**உலகமும் அடக்கம் என்றே**
**அத்தியோன் சுற்றி வந்தான்**
**அருங்கனி கார ணத்தால்....!**

என்பது இறைத்தத்துவம் இரண்டையும் எடுத்துக் காட்டும் கவிஞர்தம் இனிய பாடலாகும்.

இங்ஙனம் இறைவன் நிகழ்த்திய இனிய திருவிளையாடல் களின் தத்துவங்கள் பலவற்றைத் தமது கவிதைகளில்எடுத்துக் காட்டுகிறார் கவிஞர். நமக்கெல்லாம் பிச்சையளித்துப் பாது காக்கும் அவ்விறைவன் பிச்சைக்காரனாகிப் "பிச்சையோ பிச்சை"யெனப் பிச்சை கேட்பதன் கருத்து யாது? இவ்வின விற்கு

**அவற்குத் தேவை அகிலப் பொருளல**
**அணிகளும் மணிகளும் தந்தவன் அவனே**
**அவன்கேட் பதெலாம் அன்பரின் இதயம்**
**அதிலே பொங்கிடும் பக்தியும் நன்றியும்**

என விடை கூறுகிறார் கவிஞர். விடை கூறுவதுடன்

**அதைநாம் தருவதில் இழப்பே இல்லை**
**ஆனால் கிடைப்பதோ பிறப்பறும் இன்பம்**

என நம் இதயத்தை ஆண்டவனுக்கு ஈந்து, பிறவாப் பேரின்ப மாகிய பயனை எய்துக என மாந்தர்க்கு உணர்த்துகிறார். கொடுப்பது சிறிது. கொள்வது மிக மிகப் பெரிது. இறை வற்குக் கொடுப்பது மிகச்சிறிய இதயம். அவன்பால் பெறு வதோ மிகப்பெரிய பிறவாப் பேரின்பம். இவ்வுண்மைகளை இனிது விளக்கும் பாடல்பகுதி படித்துப்படித்து, பாடிப்பாடி, உணர்ந்து உணர்ந்து மகிழ்தற்குரியதாகும்.

தமிழ் வளர்ந்த வகையை, தமிழ் இலக்கிய வரலாற்றை ஒரே பாடலில் அடக்கிக் காட்டுகிறார் கவிஞர். அகத்தியமும் தொல்காப்பியமும், சங்கப் பாடல்களின் அகமும் புறமும் வள்ளுவரின் திருக்குறளும், சிலம்பும், நாயன்மார்களும் ஆழ்வார்களும் அருளிய பக்திப் பாசுரங்களும், ஒட்டக்கூத்த

ரின் உலாநூல்களும் புகழேந்தியின் நளவெண்பாவும், சேக்கிழார்அருளிய திருத்தொண்டர் புராணமும், கம்பன் தந்த இராம காவியமும், காளமேகத்தின் கவிதைப் பொழிவும், பாரதியின் தேசியக் கவிதையும் என ங்இஙனம் வளர்ந்த தமிழைத் தம் உயிரெனப் போற்றுகின்ருர் கவிஞர். அவ்வினிய உயர்ந்த தமிழ்மொழியைத் தந்த இறைவனை

**தமிழ்தனைத் தந்து தமிழ்க்குள் தானிருந்து**
**அமிழ்தம் ஈந்தனன் அருள்நா கேசனே**

எனப் போற்றுகின்ருர். சொல்லாகவும், சொல்லின் பொருளாகவும், அப்பொருள்தரும் இன்பமாகவும் திகழும் இறைவனை "தமிழ்க்குள் தானிருந்து அமிழ்தம் ஈந்தனன்" என்று ஆசிரியர் கூறும் கவிதைநயம் பாராட்டுக்குரியது.

திருத்தொண்டர் புராணம் கூறும் தொண்டர்தம் செயற்கருஞ் செயல்களை எண்ணி எண்ணி வியக்கிருர் கவிஞர். எண்ணவும் இயலாத அவ்வருஞ் செயல்களில் ஒன்றையேனும் நாம் செய்தோமா? செய்யத்தான் இயலுமா? அவைகளில் எதையும் நாம் செய்யவேண்டாம். ஆனல் அவர்கள் கொண்ட அன்பையாவது நாம் கொள்ளவேண்டும். அவர்கள் ஓதிய அன்பு மொழிகளையேனும் நாம் பேசவேண்டும். அவர்கள் செயலால் செய்தவற்றை அங்ஙனம் செய்தற்குரிய அன்பினை மனத்தால் நினைந்து மொழியால் பேசி அப்பெருமானது அருளைப் பெற்று உய்வோமாக-என விரும்புகிருர் கவிஞர்.

**அடியார் தொண்டில் எதையுநாம் செயவிலை**
**ஆயின்நா கேசன் அருளின்றி உய்விலை**
**பிள்ளைக் கறிதவிர், பெருமான் பக்திசெய்**
**பேயாக வேண்டாம், பேசுக அவனையே**
**உதிரம் வேண்டாம், உளநெய் ஊற்றுக**
**உளவெலாம் வேண்டாம், உளநினைத் திடுக**

பெருமானுக்கு நீ சிறுத்தொண்டரைப் போல் பிள்ளைக்கறி தர வேண்டாம். ஆனல் அவனிடம் பக்திசெய்தால் போதும்.

காரைக்காலம்மையாரைப்போல் பேயாகவேண்டாம். ஆனல் இறைவன் புகழை என்றும் பேசினல் போதும். கலியநாய ஞரைப் போல் உன் உடல் ரத்தத்தை ஊற்றி இறைவன் சந்நிதிக்கு நீ விளக்கேற்ற வேண்டாம். உன் மனமாகிய நெய்யை ஊற்றி ஞான விளக்கை ஏற்றி அப்பெருமான் திரு முன் வைப்பின் அதுவேபோதும். உன்னிடம் உள்ள பொருள் களையெல்லாம் இறைவர்க்குத் தர வேண்டாம். உன் உள்ளத் தைத் தந்து அவனை நினைத்தால் அதுவே போதும். இங்ஙனம் இவற்றை தமக்கு அருளும்படி கேட்டு

**இவையே எமக்கிங் கருள்வாய்**
**நவையும் ஏற்கும் நாகே சுரனே**

என எல்லாப் பிழையும் பொறுத்தருளும் இறைவன்பால் வரம் வேண்டுகிருர் கவிஞர்.

பண்டு தமிழ்நாடு முப்பெரும் பகுதிகளை உடையதாய் திகழ்ந்தது. அவை சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு என்பவை. அம்மூன்றும் ஒவ்வொரு வகையில் சிறந்தது. சேர நாடாகிய மலைநாடு யானைகளால் சிறந்தது. சோழநாடு சோற்றுவளம் நிரம்பியது. பாண்டிநாடு முத்துவளம் பெற்றது.

**வேழ முடைத்து மலைநாடு மேதக்க**
**சோழ வளநாடு சோறுடைத்து-பூமியர்கோன்**
**தென்ஞடு முத்துடைத்து** ..........

என முத்தமிழ் நாட்டையும் பாராட்டுவார் ஔவையார். ஆயின் இக்கவிஞரோ குன்றத்தூர் சூழ்ந்த வடதிருநாகேசுவர நிலப் பகுதியை இம் மூன்றுநாடும் ஒருங்கு சேர்ந்த தமிழ் நாடாகப் போற்றுகிருர். குன்றுகள் சூழ்ந்த குன்றத்தூரை சேரநாடென்கிருர். நெல்விளை வயல்கள் நிறைந்து சோற் றுக்குப் பஞ்சமிலாமையால் இதனை சோழநாடென்கிருர். சேக் கிழார் பெருமான் தோன்றிச் சொற்பொருட்சுவை நிரம்பிய தொண்டர் புராணம் பாடித் தமிழ்வளர்த்த பெருமை யுடைமை யின் இதனைப் பாண்டிய நாடென்கிருர்.

**குன்றுகள் சூழ்தலால் குன்றத் தூரினை**
**என்றும் சேர நாடென ஏத்தலாம்**
**பாரும் வியக்கப் பரவும் நெற்கதிர்**
**சோறும் அளித்தலால் சோணு டெனலாம்**
**சொற்றமிழ்ச் சுவைதரு சேக்கிழார் தோன் றலால்**
**உற்றதோர் பாண்டி நாடாய் உரைக்கலாம்**
**மும்மை நாட்டின் தன்மை நிரம்பலால்**
**செம்மைத் தமிழ்நா டென்றே செப்பலாம்**

என தமது குன்றத்தூர் பகுதியை முழுமை பெற்ற தமிழ் நாடாகவே கண்டு பாராட்டும் கவிஞரின் தாய் நாட்டுப் பற்று பாராட்டத் தக்கதாகும்.

உமையம்மை ஓரூரும் ஒரு பெயரும் இல்லாத உலகத் தாய். ஆனுல் ஓரூரும் இல்லாத அத்தாய் தெய்வம் நாமெல் லாம் உய்யும் பொருட்டு குன்றத்தூர் என்னும் ஒரூரை உடையவளானுள். ஒருருவும் இல்லாத அவ்வன்னை அவ்வூரில் பல இடத்தும் பல உருக் கொண்டு பலபேர் பெற்றுத்திகழ் கிருள். குன்றத்தூர் செம்பரம்பாக்க ஏரியில் கன்னியாய் நின் ருள். பின்னர் அவ்வூர் எல்லையைக் காவல்புரியும் இனிய பொன்னியாய் வந்தாள். அதன்பின்னர் பகைவரை அடக்கும் கொடிய வேம்புலியம்மனுனுள். முடிவில் வடநாகேசுரரின் இடப்பாகம் பெற்று அவர்தம் அருள்வடிவை மேற்கொண்டு காமாட்சியாகித் திகழ்கிருள்.

**உய்யநாம் உலகன்னை அனைத்தும் ஆனுள்**
**ஒருருவும் இல்லாதாள் அரனுர் தேவி**
**செய்யபல வடிவுற்ருன் குன்றத் தூரில்**
**செம்பரம்பாக் கவேரியில் கன்னி யானுள்**
**துய்யதோர் எல்லைதனைக் காத்து நின்று**
**துலங்குமெழில் பொன்னியெனப் பேரும் பெற்ருள்**
**வெய்யவேம் புலியம்மன் ஆனுள் நாக**
**வீசர்பால் உறறவன்றன் அருளைப் பூண்டாள்**

இங்ஙனம் ஓரூருவும், ஒருருவும், ஒருபேரும் இல்லாத உலகன்னை பல ஊரும் பல்லுருவும் பலபேரும் கொண்டு

உலகை வாழ்விக்கும் கடவுள் தத்துவத்தைக் கவிதையாக்கித் தருகிறூர் கவிஞர்.

வடதிருநாகேசுவரப் பெருமான்பால் கவிஞர் கொண்டுள்ள ஈடுபாடு அவர்தம் கவிதைகளில் நிரம்பியுள்ளமை காண்கிறோம். அப்பெருமானது திருத்தேர் விழாவின் சிறப்பில் மனதைப் பறிகொடுக்கிறூர் அவர். அத்தேர்வரும் வழிமேல் விழிவைத்துக் கொண்டு அவ்வழிகளையும், அவ்வழிகளில் எல்லாம் தேரோடும் வகைகளையும் வருணித்து மகிழ்கிறூர். இவற்றையெல்லாம் காணும் கவிஞர் யார்? எங்கிருந்தோ வந்தவர் அவர். இத்தலத்தில் வாழும் பேறுபெற்றவர். இறைவன் பவனிவரும் அத்திருத்தேரை ஒவ்வோராண்டும் இழுத்து மகிழும் பாக்கியம் பெற்றவர். எந்த ஆண்டிலாவது வேறு இடத்திற்குச் சென்று தங்கியிருக்கும் நிலை நேரினும், அத்தேர் விழாவின் போது குன்றத்தூருக்கு ஓடோடிவந்து இறைவன் எழுந்தருளிப் பவனிவரும் அத்தேர் விழாவில் கலந்து கொள்ள வேண்டும். அப்பெருமானது திருத்தேரை இழுத்து நடத்தி மகிழ வேண்டும். மகிழ்ந்து அவனது அருளுக்கு உரியவராக வேண்டும் - என்று விரும்புகிறூர் கவிஞர். தம்மை அன்று எங்கிருந்தாலும் இவ்வூருக்குக் கொணரவேண்டும் என்று இறைவனை வேண்டுகிறூர்.

**எங்கோ இருந்தவன் இங்குவந் துறைந்தேன்**
**என்றுமுன் திருத்தேர் இழுப்பதில் உவந்தேன்**
**எங்குசென் றுலுமுன் இனியதேர் இழுக்க**
**இங்கெனைக் கொணர்வாய் எந்தைநாகேசனே!**

என்னும் கவிதை ஒவ்வோராண்டும் நாகேசுரரின் திருத்தேர் இழுக்கும் திருத்தொண்டில் தாம் தவறக்கூடாது எனக் கவிஞர்கொண்ட ஏக்கத்தைப் புலப்படுத்தி, எல்லோரையும் அத்தொண்டிற்கு அழைக்கிறது எனலாம்.

சொல் நலம் பொருள் நலம் ஆகியவற்றுடன் ஓசை நலமும் பெற்றுள்ளன இந்நூலின் கவிதைகள்.

**ஆக்கவும் யாவையும் காக்கவும் ஊழியில்**
**அழிக்கவும் வல்ல ஈசா**
**தாக்குவாய் கருணையால் நோக்குவாய் துயரினைத்**
**தணிக்குவாய் கண்டு ளேனே.**

என்னும் அடிகளில் பலசீர்களில் எதுகை அமைந்து செவிகட்கு இன்னிசை பயந்து நிற்றல் காண்க.

இங்ஙனமே அடியின் சீர் முழுதும் மோனை அமைந்து ஒலியின்பம் பயத்தலைப் பல இடங்களில் கண்டு மகிழலாம்.

**அத்தனை அணைந்தவள் அவளென அறிவோம்**
**அயனரி அவனே அம்பிகை அவனே**
**பற்றற்ருன் பற்றினையே பற்றி டென்றே**
**பகர்ந்திட்டார் வள்ளுவனுர் படித்ததுண்டு.**
**சங்கரன் சம்பு சயம்பு சதாசிவன்**
**தமிழ்தனைத் தந்து தமிழ்க்குள் தானிருந்து**

என இவ்வடிகளில் மோனை அல்லது சீர்களின் முதலெழுத்து திரும்பத் திரும்ப வந்து இன்னோசை தருதல் அறிந்து இன்புறலாம்.

ஆசிரியச் சந்த விருத்தங்கள் எனவரும் பாக்கள் தரும் ஒலியின்பம் பாடிப்பாடி மகிழ்தற்குரியன.

**உணரு மடியவர் மனதினில்**
**உறைய மகிழ்வுடன் வருபவன்**
**உலகு முழுவதும் தொழுதிட**
**உருவம் பலவிதம் அமைபவன்**

நிரையசைகள் மிகுதியாக வந்து முழுஇசையின்பம் பயக்கும் சந்த விருத்தம் பிறிதொரு வகையான ஒலியின்பம் பயத்தலும் காணலாம்.

**பதியென லிதுவென புவியினர் புகழ்ந்திட**
**பரந்தது வடதிரு நாகேசுரமே!**
**அதிசய மிதுவென அமரரும் தொழுதிட**
**அனுதினம் வருவது நாகேசுரமே!**

இங்ஙனம் இந்நூலில் அமைந்துள்ள ஒலியின்பங்கள் பலப்பலவாகும்.

கவிஞர்கள் பெரும்பாலும் கவிதையின் தொடக்கத்திலேயே அவையடக்கம் பாடுவர். ஆயின் இக்கவிஞரோ தாம் பாடிய நான்மணிமாலையின் அந்தத்தில் அவையடக்கம் பாடுகிறார். வடதிருநாகேசனைப் பாடக் கட்டளையிட்டனர் கோயிலார். தேவாரம், திருவாசகம், திருமந்திரம், திருவிசைப்பா முதலான பன்னிரு திருமுறைப் பதிகங்களில் காணும் செந்தமிழ்த் தீம்பாடல்களைக் கேட்டு மகிழும் நாகேசனின் திருச்செவிகளில், வேம்பினும் கைக்கும் தமது கொடுந்தமிழ்ப் பாடல்கள் சென்று கலக்குமோ என்று ஏங்குகிறார் இக்கவிஞர். ஆயினும் மக்களின் மழலையை அம்மக்களை ஈன்ற மாண்புடையத் தாய் அருமை அருமையெனப் பாராட்டி மகிழ்வாள். இங்ஙனமே உலகெலாம் பெற்ற வணகிய எந்தை நாகேசன் அவன் மதலையாகிய எனது உளரலை மழலையின்பமாகக் கொண்டு மகிழ்வான். இங்ஙனம் எண்ணிக் கவலை நீங்கிக் கவிதை பாடத் துணிந்தார் கவிஞர்.

**எளியோன் எனைப்பா இயற்றப் பணித்தனர்**
**பன்னிரு திருமுறைப் பதிகம் கொண்டுள**
**எண்ணறும் பற்பல இன்னிசைப் பாடலால்**
**தீந்தமிழ் கேட்கும் சிவன்தோ டுடைச்செவி**
**வேம்பெனும் என்தமிழ் விரவுமோ அறியேன்**
**இருப்பினும் பிள்ளையின் உளரலை ஈன்றவள்**
**அருமை யெனவே அகமகிழ் தலைப்போல்**
**உலகெலாம் பெற்றவன் உவப்பான் என்றியான்**
**கலக்கம் நீங்கினேன் கவிதை பாடினேன்**

எனக் கவிஞர் பாடும் அவையடக்கப் பாடலின் கருத்து கல்நெஞ்சையும் கனிவிப்பதாகும்.

நான்மணிமாலையின் முத்தாய்ப்பாகக் கவிஞர் வடதிருநாகேசுரத் திருக்கோயில் தொண்டில் ஈடுபட்ட அறங்காவலரை வாழ்த்துகிறார். செந்தமிழ்க்கு வாழ்வருளி அத்

திருக்கோயிலைத் தாபித்த சேக்கிழாரை வாழ்த்துகிருர். அக்கோயிலின் சிவப்பணியை விடாது வளர்த்து வரும் செங்குந்தரை வாழ்த்துகிருர். அச்சிவப்பணியின் பயன்களை ஏற்று மகிழும் வடதிரு நாகேசுரத்தில் வாழும் மாந்தரனை வரையும் வாழ்த்துகிருர். இறுதியில் உயிர்கள் வாழும் உலகெலாம் வாழ வாழ்த்துகிருர் கவிஞர்.

**வாழ்க நாகேச் சுரம்வாழ் மாந்தர்**
**வாழ்க வாழ்க வாழ்க**
**மன்னிய உயிர்கள் வாழும் உலகெலாம்**t

என்பது கவிஞர் பாடிய நான்மணிமாலையின் நாற்பதாவது மணி. உலகெலாம் என்று தொடங்கும் இம்மணிநூல் சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணம் போல உலகெலாம் என்றே நிறைவு பெற்றுத் திகழ்கிறது.

இங்ஙனம் சொற்சுவையும், பொருட்சுவையும் பக்திச் சுவையும் நிரம்பிய நாகேசுவரர் நான்மணி மாலை வாழ, அம் மாலையை ஆக்கி அளித்த கவிஞர் அறிவானந்தம் வாழ அதனை ஆக்குதற்கு துணை நின்ற தேவத்தான அறங்காவலர் வாழ, அவ்வறங்காவலரை ஊக்குவிக்கும் குன்றத்தூர் மாந்தர் வாழ, உலகெலாம் வாழ, இவற்றையெல்லாம் வாழ்விக்கும் வடதிருநாகேசனின் திருவருள் வாழ என் நெஞ்சில் நீங்கா திருந்து அருள் புரிந்து வரும் செவ்வேள் முருகன் திருவடி மலர்களை நெஞ்சாற நினைத்து, வாயாரப் பாடி, மெய்யார வணங்கி மகிழ்கின்றேன்.

தில்லிப் பல்கலைக் கழகம்
12-2-81

இங்ஙனம்

[signature]

# முன்னுரை

குன்றத்தூர் வடதிருநாகேசுவரம் ஆலயத்தில் வீற்றிருக்கும் திருநாகேசுவரப் பெருமான்மீது பாமாலை சாற்றி வணங்க வேண்டும் என்ற ஆவல் நீண்ட காலமாக என் நெஞ்சத்தில் இருந்து வந்தது.

இந்த நிலையில் குன்றத்தூரில் பாரதி இலக்கிய மன்றம் என்ற ஓர் அமைப்பு ஏற்படுத்தப்பட்டு, அதன் தலைவனாக நான் தேர்ந்தெடுக்கப்பட்டு சிறந்த முறையில் இலக்கிய நிகழ்ச்சிகள் நடைபெற்றன. அவற்றில் ஒரு நிகழ்ச்சிக்கு வருகை புரிந்த திரு. கே. குப்புசாமி முதலியார் அவர்கள் என்னைச் சந்தித்தார். சமீபத்தில்தான் எனது சொற்பொழிவைக் கேட்டதாகவும், அதன் பிறகே என்னைப்பற்றிய விவரங்களை அறிந்ததாகவும் கூறி மிகுந்த அன்புடன் பேசிக் கொண்டிருந்தார். எந்த வித ஆர்ப்பாட்டமுமின்றி எளிமையாகப் பழகிய அவர் தேவஸ்தானத்தின் அறங்காவலர்களில் ஒருவர் என்று அறிந்தபோது நான் மிகவும் ஆச்சரியமடைந்தேன்.

அன்றே அவர் என்னை தேவஸ்தான அலுவலகத்திற்கு அழைத்துச் சென்று நிர்வாக அறங்காவலரிடம் அறிமுகம் செய்து வைத்தார்.

நிர்வாக அறங்காவலர் திரு. டி. எம். நாகலிங்க முதலியார் அவர்கள் உயர்ந்த தமிழ்ப்பற்றும், சைவப்பற்றும் ஒருங்கே கொண்டு திகழ்பவர். அவருடன் உரையாடுவதே ஓர் இனிய அனுபவமாகும். "நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும் பண்புடையாளர் தொடர்பு" என்பதற்கு உதாரணமாக விளங்குபவர் அவர்.

சிறிதுநேரப் பழக்கத்திலேயே என்னைப் புரிந்து கொண்டு ஆலயத்தில் தொடர்ந்து என் சொற்பொழிவுகள் நடைபெறுவதற்கு ஏற்பாடு செய்ததோடு, திருநாகேசுவரப் பெருமான் மீது ஒரு கவிதை நூல் பாடும் பொறுப்பைக் கொடுத்தார். அதன் மூலம் எனது நீண்டகால ஆவல் நிறைவேற வாய்ப்பளித்தார்.

நான் மகாகவி பாரதியாரிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டவன். அதன் பிரதிபலிப்பாக அவர் மணக்குளத்து விநாயகர்மீது "விநாயகர் நான்மணிமாலை" பாடியிருப்பது போல், நான் குன்றத்தூர் திருநாகேசுவரர்மீது "நாகேசுவரர் நான்மணிமாலை" பாடியிருக்கிறேன்.

சைவசமயப் பெரியோர்கள் அனைவரின் வணக்கத்துக்கும் உரிய, தருமையாதீனம் குருமகாசந்நிதானம் இந்நூலுக்கு ஆசியுரை தந்திருக்கிறார்கள்.

சைவச் சான்றோர்களும் இலக்கிய விற்பன்னர்களுமான அருள்மொழி அரசு திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள், வாகீச கலாநிதி கி. வா ஜகந்நாதன் அவர்கள், தமிழக அரசவைக் கவிஞர் கண்ணதாசன் அவர்கள் ஆகிய மூவரும் இந்நூலுக்கு சாற்றுக்கவி வழங்கிச் சிறப்பித்திருக்கிறார்கள்.

திருநாகேசுவரம் செங்குந்த மகாசபையின் அரசர்-நாட்டார்-தேவராஜ முதலியார் அவர்கள் வாழ்த்துரை தந்திருக்கிறார்கள். இவர்களுக்கு என் இதய அஞ்சலி உரித்தாகுக.

டெல்லிப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் க. ஆறுமுகனார் அவர்கள் ஒரு தாயின் உற்சாகத்துடன் இந்நூலைச் சிலாகித்து, ஓர் ஆசானின் பொறுப்போடு ஆலோசனைகளை வழங்கி. ஒரு மதிப்புரையே இலக்கிய அந்தஸ்துப் பெறத் தக்க ஆராய்ச்சிக் கட்டுரையாக அமைய முடியும் என்பதோடு அந்த மதிப்புரையைப் பெற்றதாலேயே அதைப் பெற்ற நூலும் இலக்கிய அந்தஸ்தைப் பெற்றுவிட முடியும் என்பதை நிலைநாட்டியுள்ளார். அவருக்கு என் இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சிறுவயது முதலே என்னுடன் கருத்து முரண்பாடு கொண்டவராயிருந்தாலும், அந்த முரண்பாடுகள் முற்றிய நட்புக்கு இடையூறாகிவிட முடியாது என்பதை உணர்த்திக் கொண்டிருக்கும் எனது இனிய நண்பர் இளவேனில், இந்நூல் சிறந்த வடிவிலும் குறுகிய காலத்திலும் அச்சாகி வெளிவரப் பெரிதும் ஒத்துழைத்தார். நன்றி சொல்வது ஒரு மரபு என்பதற்காக நண்பருக்குக்கூட அதைச் சொல்லிக் கொண்டிருக்க வேண்டுமா என்ன?

எனக்கு இந்த வாய்ப்பை அளித்த நிர்வாக அறங்காவலர் T.M. நாகலிங்கமுதலியார் அவர்களுக்கும், இங்கு என்னை அறிமுகப்படுத்தி வைத்து இந்த வாய்ப்புக்கிடைக்க வழி வகுத்த அறங்காவலர் K. குப்புசாமிமுதலியார் அவர்களுக்கும் என்றென்றும் நன்றியுள்ளவனாகயிருப்பேன்.

**கே. பி. அறிவானந்தம்**

# திருக்கோயில் இறைபணியாளர்கள்



மேல்வரிசை : M. பாலு, கண்ணம்மாள், T. சம்பந்த முதலியார் நடுவரிசை : V. இராகவேந்திரன், T. C. இராகவப்பிள்ளை, S. சங்கரகுருக்கள், A. கணேசன், மா. மலைமருந்து K. S. நாராயணசாமி, கீழ்வரிசை : S. விஞயகம் - தவுல், T. M. நாகராஜ் பண்டிதர் - நாதஸ்வரம் T. M. மாணிக்கபண்டிதர்- நாதஸ்வரம், G. போத குரு, T. தணிகாசல பண்டிதர் - தவுல்.

# வடதிரு நாகேசுவரர் கோயில் தல வரலாறு

## திருக்கோயிலும் அதன் வகையும்

இளம் பருவத்திலேயே இதயத்தில் திருக்கோயில் வழி பாடு பதியவேண்டும் என்பதற்காக ஔவைப்பிராட்டியார் "ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்று பாடினார். அதற்கு ஒருபடி மேலேபோய் உலகநாதர் "கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்று வலியுறுத்தினார். ஆனால் நம் தமிழகத்தில் இறையுணர்வு மக்களின் பண்பாகத் தழைத்தோங்கியதால் கோயிலில்லாத ஊரே எங்கும் கிடை யாது.

சங்ககாலத்திலேயே பல்வேறு கோயில்கள் வழிபாட்டுக் குரியனவாக விளங்கிவந்ததைச் சங்கநூல்கள் சிறப்பாகக் குறிப்பிடுகின்றன. பூம்புகாரில் "பிறவா யாக்கைப் பெரி யோன்" கோயில்முதலாக என்னென்ன கோயில்கள் இருந்தன என்பதைச் சிலப்பதிகாரம் பட்டியல் போட்டுக் காட்டுகிறது. "காடுங்காவும் கவின்பெறு துருத்தியும்'; முதலாக எந்தெந்த இடங்களில் வைத்து வழிபாட்டுக்குரிய தெய்வங்கள் வணங்கப் பட்டன என்பதைத் திருமுருகாற்றுப்படை தெளிவாக விளக்கு கிறது.

பண்டைய தண்டமிழ் நாட்டில் பலவகைக் கோயில்கள் இருந்தன என்று அப்பரின் தேவாரம் குறிப்பிடுகிறது.

**பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்,**
**பெருங்கோயி லெழுபதினோ டெட்டு மற்றும்**
**கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற் கோயில்**
**கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில்**
**இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்தும்**
**இளங்கோயில் மணிக்கோயில் ஆலக் கோயில்**
**திருக்கோயில் சிவனுறையும் கோயில் சூழ்ந்து**
**தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீரும் அன்றே!**

இவ்வகையிலமைந்த கோயில்களுக்கப்புறம் கற்றளியால் கோயில்கண்ட பெருமை நம் தொண்டை மண்டலத்தை ஆட்சி புரிந்த பல்லவ மன்னர்களையே சாரும். கி. பி. 610 முதல் கி. பி. 690 வரை அரசாண்ட மகேந்திரவர்மனும் மாமல்லனும் கற்களிலே செய்து காட்டிய அற்புதங்கள் தமிழ்நாட்டின் சமய வளர்ச்சிக்கு ஒரு புதிய பாதையைத் திறந்துவைத்தன. சிற்பக் கலை சிறந்தோங்கி வளர்ந்தது. காஞ்சி கைலாச நாதர் கோயிலைக் கற்களால் கட்டிய இராசசிம்மபல்லவன் இன்றைய கோயில்களுக்கு முன்னேட்டமான ஓர் அமைப்பை உரு வாக்கித்தந்தான்.

கோயில்கள் இருவேறு வகைகளில் அமைகின்றன. ஒரு வகை இறைவன் திருவுருவம் முதலில் அமைந்து படிப்படி யாக அதைச்சுற்றிலும் கோயில் எழுவதாகும். மற்றொருவகை, கோயில் எழுப்பப்பட்டு அதில் இறைவன் திருவுருவைப் பிரதிஷ்டை செய்வதாகும். முதல்வகைக்கு உதாரணமாக மதுரை சோமசுந்தரர் ஆலயத்தையும், இரண்டாம் வகைக்கு உதாரணமாக, தஞ்சை பிரகதீசுவரர் ஆலயத்தையும் குறிப் பிடலாம்.

இவ்விதம் இறைவன் திருவுருவம் அமைவதிலும் சுயம்பு வாகவே அமைதல், பெருமைக்குரிய மகான் ஒருவரால் அமைக்கப்படுதல் என இருவேறு நிலைகள் உள்ளன.

**திருவட நாகேசுவரம்**

தமிழகத்தின் தலைநகரான சென்னைக்கு அருகில் 16 கல் தொலைவில் குன்றத்தூர் வடநாகேசுவரம் அமைந்துள்ளது. இங்கு எழுந்தருளியிருக்கும் இறைவனின் திருப்பெயர் நாகேசுவரர் என்பதாகும். இங்கு அமைந்திருக்கும் ஆலயம் இறைவன் திருவுருவம் அமைந்து அதைச்சுற்றி எழுப்பப்பட்டதாகும். அமைத்தவரோ பெருமைக்குரிய மகான் மட்டுமல்லர், பெரும்புலவரும், இறைவனால் ஆட்கொள்ளப்பட்டவருமான சேக்கிழார் பெருமான் ஆவார்.

இப்படிப்பட்ட சிறப்புக்குரிய இத்திருக்கோயில் ஊரின் மத்தியில் மூன்று ஏக்கர் பரப்பளவில் எழுப்பப்பட்டுள்ளது. திருக்குளமும் பூந்தோட்டமும் இதன்கண் அமைந்துள்ளன. திருக்கோயில் 300×300 சதுர அடிகள் கொண்டதாக விளங்குகிறது.

திருக்குளத்தின் பெயர் சூரிய புட்கரணி; தலவிருட்சம் சண்பகமரம்; பூந்தோட்டத்தில் செம்பருத்தி, நந்தியாவட்டை, சொர்ணபுஷ்பம், கொன்றை, ரோஜா ஆகிய செடிகள் வளர்க்கப்பட்டு ஆலய தினப்படி பூஜைக்கு, மேற்படி நந்தவனத்தில் கிடைக்கும் மலர்களை ஆண்டவனுக்குச் சமர்ப்பிக்கின்றனர்.

இத்திருக்கோயிலில் நடைபெறும் பூஜைகள் காரணாகம விதிப்படி நடத்தப்பட்டு வருகின்றன,

நாகத்தின் கீழ் லிங்கவடிவமாகத் திருநாகேசுவரர் அமர்ந்திருக்கிறார். அருகில் போகசக்தி அம்மன் நின்ற நிலையில் வரம் கொடுக்கும் வடிவில் அமைந்திருக்கிறார். காமாட்சியம்மன் தனியிடம் பெற்று நின்று பிரசித்தி பெற்றிருக்கிறார்.

மற்றும் விநாயகர், வள்ளிதெய்வயானை சமேதசுப்ரமணியர், சண்டீஸ்வரர், வீரபாகு ஆகிய மூர்த்திகளோடு சேக்

கிழார், சமயகுரவர் நால்வரின் திருவுருவங்களும் ஆலயத்தில் அமைந்துள்ளன.

மேற்கண்ட மூலவ மூர்த்திகளுக்கான உற்சவ மூர்த்திகளும் அமைந்துள்ளன. அத்துடன் சிவபெருமான் உற்சவமூர்த்தி யாக வரும்போது சோமாஸ் கந்தராகவும், சந்திரசேகரராக வும், நடராஜராகவும், பிட்சாடனராகவும் தனித்தனி வடிவம் பெறுகிருர்.

இந்தத் திருக்கோயிலில் இதன் பழமையையும் சிறப்பையும் தெளிவாக விளக்கும் வகையில் 45 கல்வெட்டுகள் உள்ளன. மூன்ரும் குலோத்துங்க சோழன் (கி, பி. 1178—1218), மூன்ரும் இராசேந்திர சோழன் (கி. பி. 1246—1271), முதலாம் சடா வர்மன் சுந்தரபாண்டியன் (கி. பி. 1251—1271) முதலாம் மாற வர்மன் குலசேகர பாண்டியன் (கி. பி. 1268—1311), முதலாம் அரிகரராயர், இரண்டாம் தேவமகாராயர் (கி.பி. 1422—1432), மல்லிகார்ச்சுன மகாராயர் (கி.பி. 1509—1529), சீரங்க தேவ ராயர் (கி. பி. 1582—1582) முதலிய பல மன்னர்களின் ஐந்து நூற்ருண்டுக்கால கல்வெட்டுகள் இதில் காணப்படுகின்றன.

இவ்வளவு சிறப்புகள் பெற்ற இத்திருக்கோயிலின் மூலவரை நாகேசுவரர் என்ற பெயரில் சேக்கிழார் பெருமான் ஏன் அமைத்தார் என்பது சுவை மிகுந்த வரலாருகும்.

**சேக்கிழார்**

சேக்கிழார் தொண்டை நாட்டின் இருபத்து நான்கு கோட் டங்களில் புலியூர் கோட்டமென வழங்கிய நம் குன்றத்தூரில் வேளாளர் மரபில் சேக்கிழார் குடியில் பிறந்தார். திருமுறை கண்ட சோழனை இராஜராஜ சோழன் மீது சைவசமயத்தார் கொண்டிருந்த அன்பிற்கு அடையாளமாக அவருக்குக் குழந் தைப்பருவத்தில் அருள்மொழித்தேவர் என்று பெயர் வைத் தனர் அவர் தம் பெற்ரேர்.

அப்பொழுது சோழப்பேரரசை ஆண்டு வந்த இரண்டாம் குலோத்துங்கன் கல்வி நலம் வாய்ந்தோரைக் கண்டுணர விரும்பி மூன்று கேள்விகளை எழுதி "சான்றோர் உடைத்து" எனும் தொண்டைநாட்டில் அதற்கு விடை கிடைக்குமா எனக் காண விரும்பி அவைகளை அனுப்பிவைத்தான். சேக்கிழார் அந்தக் கேள்விகளுக்கான விடைகளைத் திருக்குறளிலிருந்தே எழுதி அனுப்பினர். பின்னாளில் "தெய்வப் புலவர்" எனப் புகழ் பெற்ற சேக்கிழார் தமக்கு முன்னால் அப்பெயரோடு துலங்கிய திருவள்ளுவரிடமிருந்தே அந்த விடைகளை எழுதி அனுப்பியது மிகவும் பொருத்தமல்லவா?

அப்படியென்ன கேள்விகள்? அவைகளுக்குத் திருக்குறளி லிருந்தே எப்படி விடைகள் கிடைக்கின்றன?

**1 மலையை விடப் பெரியது எது?**

**நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்**
**மலையினும் மாணப் பெரிது!**

**2 கடலைவிடப் பெரியது எது?**

**பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்**
**நன்மை கடலில் பெரிது!**

**3 உலகைவிடப் பெரியது எது?**

**காலத்தினால் செய்த நன்றி சிறிதெனினும்**
**ஞாலத்தின் மாணப்பெரிது!**

இந்தக் கேள்விகளும் விடைகளும் சேக்கிழாருக்குப் பின் வந்த புலவர்களை மிகவும் கவர்ந்தன. கவிச்சக்ரவர்த்தியான கம்பரே வேளாளர் மரபைப் புகழும் தனது 'ஏர் எழுபது' என்னும் நூலில் இந்த நிகழ்ச்சியை நினைந்து மகிழ்ந்து....

**மண்ணில் கடலில் மலையில் பெரிதென்என**
**எண்ணி எழுதிக் கொடுத்த ஏற்றக்கை**

என்று பாடியுள்ளார். இது சேக்கிழார் மீது கம்பர் கொண்டிருந்த அன்புக்கு அடையாளமாக இன்றளவும் விளங்குகிறது.

விடைகளைக் கண்ட சோழமன்னன் சேக்கிழாரின் தகுதியை உணர்ந்து தனது அரசவையின் முதலமைச்சராக்கினான். "உத்தம சோழப்பல்லவர்" என்ற சிறப்புப்பட்டத்தையும் வழங்கினான்.

சேக்கிழார் இவ்விதம் முதலமைச்சராகப் பணியாற்றிய காலத்தில்தான் திருத்தொண்டர் புராணம் பாடுவதற்கான சூழல் ஒன்று ஏற்பட்டது. மன்னன் திருத்தக்கத்தேவர் பாடிய சீவக சிந்தாமணி என்ற சமண நூலில் ஆர்வம் கொண்டு, அதை அவ்வப்போது கேட்டு மகிழ்ந்ததை சேக்கிழார் கண்டார். சைவத்தின் சிறப்பை மன்னன் முழுமையாக உணரும் வகையில் அடியவர் வரலாறுகளை விளக்கமாக எடுத்துச் சொன்னார்.

அவைகளைக் கேட்டு மகிழ்ந்த மன்னன் இந்தக் கதைகள் தன்னோடு போய்விடக் கூடாது, தமிழ்மக்கள் என்றென்றும் கேட்டு மகிழும் வகையில் காவியமாக்க வேண்டும் என்று நினைத்தான். அதற்குத் தகுதி வாய்ந்தவர் சேக்கிழாரே என்று உணர்ந்து அவரே அதைப்பாடியருள வேண்டும் என்று வேண்டினான். சேக்கிழார் அதைத் தனக்கு கிடைத்த பெரும் பேருகக் கருதி ஏற்றுக் கொண்டார். தில்லை சென்று ஆனந்தக் கூத்தன் அருகிலிருந்து பாட வேண்டுமென்று ஆர்வம் கொண்டு விடைபெற்றுப் புறப்பட்டார்.

காவியத்தைத் தொடங்குமுன் இறைவன் திருமுன் நின்று எவ்விதம் தொடங்குவேன் என்று கண்ணீர்மல்கி வேண்ட "உலகெலாம்" என்ற ஒலி எழுந்தது. அதையே முதலடியாகக் கொண்டு சேக்கிழாரின் "திருத்தொண்டர் புராணம்" பிறந்தது. இப்படி இறைவனே அந்த நூலுக்கு அடியெடுத்துக் கொடுத்தானென்றால் சேக்கிழார் பக்திக்கும், புலமைக்கும் வேறென்ன சான்று வேண்டும்? அடியார்கள் புகழைப்பாடும்

நூலுக்கு, தானே அடியெடுத்துக் கொடுத்தானென்ருல் அவன் அடியார்க்கு எளியவன் என்பதற்கு வேறென்ன ஆதாரம் வேண்டும்?

சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தைச் சித்திரைத் திருவாதிரையில் அரங்கேற்றத் தொடங்கி மறு சித்திரைத் திருவாதிரையில் நிறைவுபடுத்தினர்.

திருத்தொண்டர் புராணம் தனது தகுதியினலும், பெருமையினலும் "பெரிய புராணம்" என்றே புகழ்பெற்றது. சைவத்திருமுறைகளில் ஒன்ருக இணைக்கப்பட்டது.

அநபாயன் எனப்பட்ட குலோத்துங்க சோழன் பெரிய புராணத்தையும், அதைப்பாடியருளிய சேக்கிழார் பெருமானை யும் பட்டத்துயானையில் அமர்த்தி, தானே கவரி வீசிச் சிறப்பித் தான். "தொண்டர்சீர் பரவுவார்" என்று பெயர் சூட்டி வணங்கினன்.

சோழர்குலம் சைவத்திற்குச் செய்த தொண்டுகளிலெல்லாம் மிகப் பெருந்தொண்டாகப் பெரியபுராணம் படைக்கச் செய்த இத்திருத்தொண்டு இன்றளவும் நிலவி இரண்டாம் குலோத் துங்க சோழனுக்குப் புகழ் தந்துகொண்டிருக்கிறது.

**திருநாகேசுவரம்**

இவ்வாறு சிறப்புப்பெற்ற சேக்கிழார் பெருமான் தாம் அமைச்சராகப் பணிபுரிந்த நேரத்தில் கும்பகோணத்திற்கு அருகிலுள்ள திருநாகேசுவரத்திற்குச் சென்று அங்கிருந்த நாகேசுவரப் பெருமானை வழிபட்டு வந்தார்.

நாக அரசன் ஆதிசேடன் பூசித்ததால் அத்தலத்தின் இறைவன் "நாகேசுவரர்" என்று பெயர் பெற்ருர்.

அங்குள்ள குளத்தில் சூரியன் மூழ்கித் தனது சாபம் நீங்கப் பெற்றதால் குளத்திற்குச் "சூரியபுட்கரணி" என்று பெயர் ஏற் பட்டது,

அர்த்த நாரீசுவர வடிவம் வேண்டி அன்னை பார்வதி அங்கு சண்பகமரத்தின் கீழிருந்து தவம் புரிந்ததால் "சண்பக மரம்" தலவிருட்சமாயிற்று. அத்தலம் அவரது ஆன்மார்த்த தலமாக விளங்கியதோடு அவருக்கு இறைவரது திருவடி ஞானமும் கிடைக்கப் பெற்ற தலமாகும். அதனால், சேக்கிழார் தமது குன்றத்தூரிலும் தாம் வழிபடும் தெய்வமான நாகேசுவரரைத் தொடர்ந்து வழிபட வேண்டும் என்ற பேரார்வத்துடன் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து "நாகேசுவரர்" என்று பெயரிட்டார்.

சூரியன் வழிபட்டதை நினைவுகூர்ந்து இங்குள்ள திருக்குளத்திற்கு அங்குள்ளதேபோல் சூரியபுட்கரணி என்றுபெயரிட்டார். அன்னைக்கு நிழல்தந்த சண்பக மரத்தையே இங்கும் தலவிருட்சமாக அமைத்தார்.

இவ்விதம் சேக்கிழார் பெருமான் திருக்கோயில் அமைத்து, அதற்கு வடதிருநாகேசுவரம் என்று பெயரிட்டு, அங்கு பூசைகளும் ஏற்பாடுகள் செய்வித்தார் என்பதைச் "சேக்கிழார் புராணம்" பாடிய உமாபதிசிவம் மிகத் தெளிவாகக் குறிப்பிடுகிறார்.

**தம்பதிகுன் றத்தூரில் மடவ ளாகம்**
**தானாக்கித் திருக்கோயில் தாபித் தங்கண்**
**செம்பியர்கோன் திருநாகேச் சுரம்போல் ஈதும்**
**திருநாகேச் சுரமெனவே திருப்பேர் சாற்றி,**
**அம்புவியில் அங்காங்க வைப வங்கட்**
**கானபரி கலம்திருநாள் பூசை கற்பித்(து)**
**இம்பர்புகழ் வளவன்அர சுரிமைச் செங்கோல்**
**இமசேது பரியந்தம் இயற்றி வந்தார்**

சேக்கிழார் நாகேசுவரரைக் குன்றத்தூரில் பிரதிஷ்டை செய்ததால் குன்றத்தூரும் நாகேசுவரம் ஆகிவிட்டதை "சேக்கிழார் பிள்ளைத்தமிழ்" பாடிய மகாவித்துவான் மீனாட்சி சுந்த

ரம்பிள்ளை அருமையாகக் குறிப்பிடுகிறார். அத்துடன் நீலநிற மேகங்கள் குவிவதால் 'இந்திர நீலப்பருபதம்' என்ற வட நாட்டுத்தலம் போலவும், செம்மணி மாடங்கள் தோன்றுதலால் "இரத்தினகிரி" போலவும், பச்சைப் பசேலென எங்கும் பசுமை துலங்குதலால் மரகதமலையெனும் "திருவீங்கோய் மலைத் தலம்" போலவும், திருநீற்றின் வெண்மை திகழ்வதால் வெள்ளிமலையான கைலயங்கிரி போலவும் குன்றத்தூர் விளங்குகின்றது என்கிறார்.

**நிலவிய நாகே சுரரினி தமர்தலின்**
**"நிகழ்நா கேசுரமாய்"**
**நீல்மணி மாடம் நிலாவலின் இந்திர**
**நீலபருப் பதமாய்க்**
**கலவிய செம்மணி மாடத் தால்ஒளி**
**காலரத்ன கிரியாய்**
**கருடப் பச்சையில் ஆலியா வோரும்**
**காண்மர கதமலையாய்**
**உலவிய வெண்சுதை தீற்று மிலால்ஒங்**
**கொருகை லைக்கிரியாய்**
**உத்தமம் ஆர்பல துவி ஞலினும்**
**உரைதரு பற்பலவாய்க்**
**குலவிய வளமார் குன்றத் தூரன்**
**கொட்டுக சப்பாணி**
**கொற்றச் சேவையர் காவல நாவல**
**கொட்டுக சப்பாணி**

இவ்விதம் நாகேசுவரர் வந்து அமர்ந்ததால் 'வட நாகேசுவரம்' என்றே குன்றத்தூர் இன்று புகழ்பெற்றுள்ளது.

சேக்கிழார் தமக்குப் பாகமாக வந்த சொத்தில் அடங்கிய நிலத்தில் ஆலயத்தை அமைத்து வழிபட்டார். திருக்கோயில் பரிபாலனத்தைச் செங்குந்தர்வசம் ஒப்படைப்பதெனத் தீர் மானித்து, தொண்டை நாட்டில் செங்குந்தர் எந்தெந்த ஊரில்

வசிக்கின்றனர் என ஆராய்ந்து, அவர்களுள் சைவத் தொண்டி லும், கல்வியிலும் சிறந்த சான்றோரை வரவழைத்து வீதிகள மைத்து வீடுகளமைத்துக் குடியமர்த்தி நிர்வாகத்தை ஒப்படைத்தார். அவர் ஏன் அவ்விதம் செய்தார் என்பதற்கு ஆதார பூர்வமான காரணம் உண்டு.

**செங்குந்த மரபினர்**

செங்குந்த மரபினர் சிறப்புப்பற்றி எவ்வளவோ நூல்கள் உள்ளன. சிவமஹாபுராணம், தமிழ்ப் புலவர் வரிசை, தனிப் பாடல் திரட்டு ஆகியவை செங்குந்தர் வீரபத்திரர் வழி வந்தவர் என்று கூறுகின்றன. கந்தபுராணம், ஈட்டி எழுபது, செங்குந்தர் பிரபந்தத்திரட்டு ஆகியவை வீரபாகு முதலான நவ வீரர்களே செங்குந்தர் என்று கூறுகின்றன. குறிப்பாக ஈட்டி எழுபது என்ற நூல் வீரபாகு தேவரின் வீரச்செயல்களை விரிவாகத் தொகுத்துக் காட்டுகின்றது.

எவ்வகையில் பார்த்தாலும் செங்குந்தர் சிவாம்சம் பெற்ற வர் என்பதை இப்புராண மரபுகள் நமக்குத் தெளிவாக எடுத் துரைக்கின்றன. குந்தம் என்ற ஈட்டியைக் கைக்கொண்டு அது குருதிப்புனலில் குளித்து செங்குந்தமாகும் வகையில் வீரப்போர் உடற்றினர் என்பதற்கு அடையாளமாகச் செங்குந் தர் இப்பெயர் பெற்றனர் என்று அறிகிறோம்.

புராணமரபு எப்படியாயினும் சோழர் சரித்திரம் எவ்வித சந்தேகத்துக்கும் இடமின்றிச் செங்குந்தர் குலம் போர்க்களங் களில் நிகழ்த்திய வீரச்செயல்களை விரிவாகக் கூறுகிறது. சங்ககாலச் சாதனைகளுக்குப் பிறகு இருண்டு கிடந்த சோழர் வாழ்வு விஜயாலய சோழனால் எழுச்சிப் பெற்றுப் பராந்தக சோழனால் வலிமையுற்று இராஜராஜ சோழனால் பேரரசாகப் புகழொளி பரப்பியபோது கைக்கோளர் படை அந்தவீரசாதனை களுக்கு உறுதுணையாக விளங்கியது. அதைத் தொடர்ந்து சோழப்பேரரசு நீண்டகாலம் நிலைத்து நிற்பதற்கான வெற்றித்

தூண்களாகச் செங்குந்த மரபினர் விளங்கிவந்தனர் என்பதை வரலாறு விரிவாகக் காட்டுகிறது.

அத்துடன் செங்குந்த மரபினர் சிவாலயங்கள் பல வற்றில் தொண்டு புரிந்த செய்திகளைக் கல்வெட்டுகள் தெளி வாகக் காட்டுகின்றன. சைவத்தை வளர்க்கும் சமயப்பணியில் அந்நாள் முதலே அவர்கள் ஈடுபட்டு வந்தனர் என்பதில் எவ் வித ஐயத்திற்கும் இடமில்லை.

**ஒட்டக்கூத்தர்**

இத்தனைக்கும் மேலாக, கவிராட்சசன், கௌடப்புலவன், சர்வஞ்ஞ கவி என்றெல்லாம் புகழ்பெற்ற ஒட்டக்கூத்தர் செங்குந்த மரபினர் என்பது அந்த மரபிற்கே பெருமைதரக் கூடிய செய்தியாகும். அவர் காலத்தில்தான், அவர் ஆஸ் தான கவிஞராக விளங்கிய அநபாய சோழன் அவையில்தான் சேக்கிழார் முதலமைச்சராக இருந்தார் என்பதும் தமிழறிந்த யாவரும் அறிந்த உண்மையாகும்.

ஒட்டக்கூத்தரின் சிறப்பைப்பற்றி எழுதுவதென்றால் அதற் கென ஒரு தனி நூலே தேவை. இருப்பினும் சேக்கிழார் ஏன் செங்குந்த மரபினரிடம் ஆலயத்தின் பொறுப்பை ஒப்படைத் தார் என்பதற்கான காரணம் ஒட்டக்கூத்தரை ஒட்டியே வருவ தால் ஒரு சிறிதேனும் கூத்தரின் சிறப்பை நாம் இதில் காணத் தான் வேண்டும்.

கூத்தமுதலியார் என்றே குறிப்பிடப்பட்ட ஒட்டக்கூத்தர் சோழநாட்டின்கண் மலரி என்ற ஊரிலே பிறந்தார் என்ப தைத் தண்டியலங்கார மேற்கோள் பாடல்....

**சென்று செவியளக்கும் செம்மையவாய்ச் சிந்தையுள்ளே**
**நின்றளவி லின்பம் நிறைப்பவற்றுள் - ஒன்று**
**மலரிவருங் கூந்தலார் மாதர்நோக் கொன்று**
**மலரிவருங் கூத்தன்றன் வாக்கு!**

என்று குறிப்பிடுகிறது. அவர் தமது புலமை ஒன்றினாலேயே படிப்படியாக உயர்ந்து சோழ மன்னர்களின் ஆஸ்தான கவிஞராக மாறினார். விக்ரம சோழன் (கி. பி. 1118—1135) குலோத்துங்க சோழன் (1123—1148), இராசராசசோழன் 1148—1171) ஆகிய முப்பெரும் மன்னர்கள் காலத்திலும் இருந்து நீண்ட ஆயுளுடன் நிறைவாழ்வுபெற்றுப் புகழடைந்தார். மன்னர்கள் மூவர் மீதும் தனித்தனியே உலாக்கள் பாடினார். அந்த மூவருலாவும், குலோத்துங்கன் பிள்ளைத் தமிழும் தமிழிலக்கியங்களில் தனிப்பெரும் புகழ்பெற்றன. "கோவையுலா அந்தாதிக்கு ஒட்டக்கூத்தன்" என்று அவர் சிறப்பிக்கப்பட்டார்.

சைவத்தின் புகழ் சாற்றும் தேவாரப் பாடல்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்த ஒட்டக்கூத்தர், ஒருநாள் சங்கமன் ஒருவன் தேவாரப் பாடலைத் தவறாகப் பாடியதால் கோபமுற்று அவனை அடிக்க அவன் மாண்டே போகிறான். அதனால் ஆவேசம் கொண்ட சங்கமர்கள் ஒன்று திரண்டு அவரைக் கொன்று பழிதீர்க்க வேண்டுமென்று ஊர் எல்லைக்கு இழுத்துச் செல்கின்றனர். அங்கே ஒரு காளிகோயிலில் புகுந்து கொண்ட அவர், இந்த ஆபத்திலிருந்து தம்மைக் காக்க வேண்டுமென அன்னையை வேண்டுகிறார். காளியோ தனது மைந்தன் வீரபத்திரன் புகழைப் பாட வேண்டுமென்று கூற, அவர் "அவ்வாறே பாடுகிறேன், நானே பாடி எழுதுவதென்றால் கவிதை தடைப்படும், ஆதலால் நீயே எழுதுக!" என்று அன்னை பராசக்திக்கே நிபந்தனை விதிக்கிறார். அதன்படியே கூத்தர் பாட, காளி எழுத உருவானதுதான் புலவர்களைப் பெரிதும் வியக்க வைக்கும் 'தக்கயாகப் பரணி". தேவார மூவருள் முதல்வரான ஞானசம்பந்தர்மேல் கூத்தர் கொண்டிருந்த அன்பிற்கு அடையாளமாக ஞானசம்பந்தர் கதையை தக்கயாகப் பரணியில் கலைவாணி காளிக்குச் சொல்வதுபோல் அமைத்துள்ளார். பரணியின் ஈற்றுப் பாடலை அவர் பாடிமுடித்த மறுகணம் இறந்த சங்கமன் எழுந்தான். மற்ற சங்கமர்களும் அவர் மகத்துவத்தை உணர்ந்தார்கள்.

ஒருமுறை செங்குந்தர் யாவரும் ஒன்று திரண்டு வந்து கூத்தரைப் பணிந்து தமது குலத்தின் சிறப்பைப் பாட வேண்டு மென்று கேட்டனர். காளிக்கே நிபந்தனை விதிக்கக் கூடியவ ரான கூத்தர் எளிதில் இதை ஏற்றுக் கொள்வாரா? "நீங்கள் கேட்பதுபோல் நான் பாடவேண்டுமானால், நமது குலத்தில் பிறந்த ஆயிரத்தெட்டு தலைப்பிள்ளைகளின் சிரங்களையறுத்துச் சிரச்சிங்காதனமிடவேண்டும்" என்றார். போர்க்களங்களில் ஆயிரக்கணக்கான பகைவர் சிரங்களை அறுத்து விளையாடும் வீரமரபினரான செங்குந்தர் தமிழுக்காகத் தங்கள் தலைப் பிள்ளைகளின் சிரங்களை அறுக்கத் தயங்குவார்களா?

அவர் நிபந்தனையை அப்படியே ஒப்புக்கொண்டு ஆயிரத் தெட்டு தலைப்பிள்ளைகளின் சிரங்களைக் கொய்து சிரச்சிங்காதன மிட்டனர். கூத்தர் அதன் மீது அமர்ந்து செங்குந்தரின் வீரச் சின்னமாக விளங்கும் குந்தம் என்ற ஈட்டியை மையமாகக் கொண்டு "ஈட்டி எழுபது" என்ற நூலைப் பாடினார். அதன் பின்னர்....

**கலைவாணி நீயுலகில் இருப்பதுவும்**
**கல்வியுணர் கவிவல்லோரை**
**நிலையாகப் புரப்பதுவும் அவர்நாவில்**
**வாழ்வதுவும் நிசமேயன்றோ?**
**சிலைவாண னுவிருந்தா யிரப் புபங்கள்**
**துணித்துமுயர் சீவனுற்றான்**
**தலையாவி கொடுத்திடும்செங் குந்தருயிர்**
**பெற்றிடநீ தயைசெய்வாயே!**

என்று பாட அறுந்த தலைகள் இணைந்தன; அனைவரும் உயிர் பெற்று எழுந்தனர்.

இப்படித் தமது புலமைத் திறத்தால் பல அற்புதங்கள் செய்து காட்டியவரான ஒட்டக்கூத்தருக்குச் சோழமன்னரால் பரிசாக அளிக்கப்பட்ட ஊர், இன்று தஞ்சை பூந்தோட்டம்

ரயில் நிலையத்தின் சமீபத்தில் "கூத்தனூர்" என்ற பெயரில் விளங்குகின்றது.

ஒட்டக்கூத்தர் இரண்டாம் குலோத்துங்கனுக்குக் குருவாகவும், அவனது சபையில் ஆஸ்தான புலவராகவும் விளங்கினர் என்பது மேற்கண்ட வரலாற்றிலிருந்துத் தெளிவாகத் தெரிகிறது. அதே மன்னனின் காலத்தில்தான் சேக்கிழார் பெருமான் அம்மன்னனுக்கு அமைச்சராக வாழ்ந்து "பெரிய புராணம்" பாடினர். அவ்விதமாயின் வயதிலும், அனுபவத்திலும் தம்மைவிடப் பெரியவரான ஒட்டக்கூத்தரிடம் அவர் பக்தியும் பாசமும் வைத்திருக்கக்கூடும் என்பதிலும், அதே போல் சைவப்பழமான ஒட்டக்கூத்தரும் சைவ அடியார்களைப் பற்றி அருமையான தமிழ்ப்பாக்களால் திருத்தொண்டர் புராணம் பாடிய சேக்கிழாருக்குத் தமது முழு ஆசியையும் வழங்கியிருப்பார் என்பதிலும் சிறிதளவும் ஐயமில்லை.

தமது வணக்கத்திற்குரியவரும், தமது முன்னோடியாக விளங்கிய தமிழ்ப்பெரும் புலவரும், தமது வழிபடு தெய்வமான சிவபெருமானின் உன்னத வீரவிளையாட்டான தட்சயக்ஞம் பற்றி "தக்கயாகப்பரணி" பாடியவருமான ஒட்டக்கூத்தரிடம் தாம் கொண்டிருந்த அன்பிற்கு அடையாளமாகவே சேக்கிழார் தாம் அமைத்த திருநாகேசுவரம் ஆலயத்தின் நிர்வாகப் பொறுப்பைச் செங்குந்த மரபினரிடம் ஒப்படைத்தார் என்று கருதுவதற்கு எவ்விதத் தடையுமில்லை. மேலும், செங்குந்தர் அந்நாளில் மேற்கொண்டிருந்த சைவப் பணிகளையும் அவர் நேரில்கண்டு உணர்ந்திருப்பார் என்பதிலும் வியப்பேதுமில்லை.

### செவி வழிச்செய்தி

மூலவ மூர்த்தியான நாகேசுவரப் பெருமான் பற்றிய செவி வழிச் செய்தி ஒன்று உண்டு.

ஒருமுறை சிவலிங்கத்தின் தலைப்பகுதியில் சிறிது உடை பட்டுப் போயிருந்தது. அதைக் கண்ணுற்ற பெரியவர்கள் பலர் மூளியாகி விட்ட மூர்த்தியை மூலஸ்தானத்தில் வைப்பது முறையல்ல என்று சொல்ல, அன்றைய ஆலயப்பொறுப்பாளர் கள் மூலவ மூர்த்தியை அகற்ற வேண்டிய சூழ்நிலைக்கு ஆளா ஞர்கள்.

ஆகவே ஆலயத்தின் மற்றொரு பகுதியில் வைக்கப்பட் டிருந்த அருணசலேஸ்வரரைக் கொண்டுவந்து மூலஸ்தானத் தில் வைத்துவிட்டு, அங்கிருந்த சுவாமியை சூரியபுட்கரணி திருக்குளத்தில் போட்டுவிட்டனர்.

அன்றைய தினமே அவர்கள் யாவரும் அதிர்ச்சியடையத் தக்க சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. தெளிந்திருந்த திருக்குளத் தின் தண்ணீர் சிறிதுசிறிதாகச் செந்நிறமடையத் தொடங் கியது. வெகுவிரைவில் திருக்குளம் முழுவதும் ரத்தச்சிவப்பா கியது.

அதைக்கண்ட யாவரும் வேதனையடைந்தனர். இதன் விளைவு என்னவாகுமோ என நடுங்கினர்.

அன்றைய இரவு ஆலயப்பணிகளில் ஈடுபாடு கொண்டு அங்கேயே வாழ்ந்திருந்த சிவனடியார் ஒருவரின் கனவில் நாகேசுவரர் தோன்றினர். அதில் அவர் உணர்த்தியபடி மூலவ மூர்த்தியைப் பக்தியோடு எடுத்துச்சென்று பழைய இடத்தில் பிரதிஷ்டை செய்தனர். திருக்குளமும் தெளிந்த நீராகியது.

அத்தோடு நீண்டகாலமாக நாகேசுவரப்பெருமானை நாகங்கள் வந்து வணங்கிவிட்டுச் செல்வதாகச் சொல்லப்படு கிறது. இன்றும்கூட இரவில் நாகம் வந்து செல்வதை அங்கு தங்கும் சிலர் கண்டிருக்கின்றனர்.

மாசி மாதத்தில் 18, 19, 20, 21, 22 ஆகிய நாட்களில் சூரிய ஒளிக் கதிர்கள், முன்னர் சூரியன் நாகேசுவரரை வழிபட்டு திருக்குளத்தில் மூழ்கி சாப நிவர்த்தி பெற்றதற்கு அடையாளமாக மூலவர்மீது தவழ்கின்றன என்பது இத் தலத்தின் தனிச் சிறப்பாகும்.

**திருவிழாக்கள்**

சித்திரை மாதத்தில் சித்திரைப் பௌர்ணமியின் போது சுவாமிக்கும் அம்மனுக்கும் திருமணம் நடத்தும் பத்தாவது நாளாகக்கொண்டு. பத்து நாட்கள் பிரமோற்சவம் நாகேசுவரருக்கு நடத்தப்படுகிறது. வைகாசி மாதத்தில் திருக்கோயில் மூலவரைப் பிரதிஷ்டை செய்த சேக்கிழார்பெருமானுடைய பூச நட்சத்திரவிழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது.

ஆனிமாதம் ஸ்ரீ நடராஜப் பெருமானுக்குத் திருமஞ்சன விழா நடைபெறுகிறது. ஆடிமாதம் இத்திருக்கோயிலுக்குச் சொந்தமான ஸ்ரீவேம்புலியம்மனுக்குப் பத்துநாள் உற்சவம் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

ஆவணி மாதத்தில் மூலமும், புரட்டாசியில் நவராத்திரியும் ஐப்பசியில் சூரசம்ஹாரமும், கார்த்திகையில் தீபமும், மார்கழியில் திருவாதிரையும், தையில் பூசமும், மாசியில் மஹாசிவராத்திரியும், பங்குனியில் உத்திரமும் விழாக்களாக மிகச் சிறப்புடன் நடைபெற்று வருகின்றன.

அத்துடன், திருக்கோயிலுக்குச் சொந்தமான பொன்னியம்மனுக்குப் பன்னிரண்டு வருடங்களுக்கு ஒருமுறை கோயில் திருப்பணி செய்து, கும்பாபிஷேகம் நடத்தி மூன்று நாட்கள் வைபோகமான திருவிழா மாமாங்க உற்சவமாக நடைபெற்று வருகிறது.

# திருக்கோயில் திருப்பணிகள்

இவ்விதமாக சேக்கிழார் பெருமானால் திருக்கோயில் நிர் வாகப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு சிறப்பான முறையில் திருவிழாக்களை நடத்திவரும் செங்குந்த மரபினர், பன்னிரண் டாம் நூற்றாண்டு முதல் இந்த இருபதாம் நூற்றாண்டளவும் பல திருப்பணிகள் செய்து வந்திருக்கின்றனர். இடைப்பட்ட சுமார் 800 ஆண்டுகளில் செங்குந்த மரபினரால் பரிபாலனம் செய்யப்பட்டு வந்த கால கட்டத்தில், மூலவரான திருநாகேசு வரருக்கு அருகில் காஞ்சி காமாட்சியின் அவதாரத்தைத் சிறப்பிக்கும் வகையில் அம்பிகையை இங்கு பிரதிஷ்டை செய்து அம்மனுக்குக் காமாட்சி என்றே பெயர் சூட்டினர்.

அதற்குப்பின் திருக்கல்யாண மண்டபம் அமைக்கப் பட்டது. அதற்கடுத்து 24 கல் மண்டபம் அமைக்கப்பட்டது. அதற்குப்பின் பிரகாரத்தைச் சுற்றிலும் பெரும் மதிற்சுவர் எழுப்பினர். 1944ல் கோவிலின் முன்பக்கம் ராஜகோபுரம் எழுப்பி, நாகேசுவரப்பெருமானின் மூலக்கருவறையின் மேலே சுவாமியறையின் மேலே அம்மன் கோபுரமும் அமைத்தனர்.

1972ல் ஆலயத்தின் ராஜகோபுரம், சுவாமி விமானம் அம்மன் விமானம், துஜஸ்தம்பம், மடைப்பள்ளி, வாகனமண்ட பம், நந்தவனம், திருமதில், ஆலய உள் கருங்கல் தளவரிசை இவைகள் யாவும் புதிதாக வர்ணம் தீட்டியும், கருங்கல் தளவரிசை புதியதாகப்போட்டும் திருப்பணிகள் செய்யப்பட்டுச் சிறப்பான முறையில் மகாகும்பாபிஷேகம் நடத்தப்பட்டது.

### அறுபத்து மூவர்

இவ்வளவு திருப்பணிகள் செய்யப்பட்டுச் சிறப்புடன் விளங்கும் இந்தத் திருக்கோயிலில் மிக முக்கியமான ஒரு திருப்பணி கவ ரிக்கப்படாமலே இருந்துவிட்டது வியப்புக் குரிய செய்தியாகும். இந்தத் திருக்கோயில் மூலவரைப் பிரதிஷ்டை செய்தவரோ சேக்கிழார் பெருமான். சேக்கிழாரோ

திருத்தொண்டர் புராணத்தைத் தெவிட்டாத தீந்தமிழில் வடித்துத் தந்தவர். திருத்தொண்டர்களுக்குச் சொல்லால் வடிவம் தந்தவரின் ஆலயத்தில் கல்லால் அவர்களுக்கு வடிவம் செய்யப்படவில்லை. சிவபெருமான் வீற்றிருக்கும் ஆலயங்களிலெல்லாம் அறுபத்து மூவர் வீற்றிருக்கின்றனர்; ஆனால் அவர்களைப் பற்றிப் பாடியவரின் ஆலயத்திலோ அவர்களின் திருவுருவங்கள் அமைக்கப்படவில்லை.

இந்தக்குறை நீங்குவதற்கான முயற்சி இப்போது மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. தற்போது நிர்வாக அறங்காவலராக விளங்கும் டி. எம். நாகலிங்க முதலியார் அவர்களும், அவரது இணைபிரியாத் துணையாக விளங்கி அறங்காவல் குழுவில் முக்கியப் பங்கேற்றுச் செயல்புரியும் திரு. கே. குப்புசாமி முதலியார் அவர்களும் அறுபத்து மூவர் திருவுருவங்கள் அமைப்பதற்கான ஆக்கப்பணிகளில் ஈடுபட்டுள்ளனர். ஆகவே அறுபத்து மூவர் விரைவில் இத்திருக்கோயிலில் மூலவ மூர்த்திகளாக இடம் பெறுவதோடு, உற்சவ மூர்த்திகளாகவும் பவனி வருவர்.

**நீராழி மண்டபம்**

மேற்கண்ட திருப்பணியோடு மற்றொரு திருப்பணியும் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. நாகேசுவரப் பெருமான் திருக்கோயிலின் தென்கிழக்கில் அமைந்துள்ள சூரிய புஷ்கரணி என்னும் திருக்குளத்தில் நீராழிமண்டபம் ஆரம்பிக்கப்பட்டு அடித்தளம் அமைத்ததோடு அப்படியே நின்றுவிட்டிருந்தது.

இந்தப் பணியையும் நிறைவு படுத்துவதென்று தீர்மானிக்கப்பட்டு, நீராழி மண்டபத்தை முழுமையாகக் கட்டி முடிக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.

இந்த இருபெரும் திருப்பணிகளுக்காக நிர்வாக அறங்காவலர் டி. எம். நாகலிங்க முதலியார், அவருக்கு உறுதுணையாக விளங்கும் அறங்காவலர் கே, குப்புசாமி முதலியார், மேலும் அறங்காவலர் குழுவில் இடம்பெற்றிருக்கும் டி. கே. சம்பந்த முதலியார், டி.கே. கணேசமுதலியார் ஆகியோரை ஆலயதரிசனம் செய்யவரும் சைவசமயப்பெருமக்கள் என்றென்றும் பாராட்டி மகிழ்வார்கள்.



கவிஞர் நூல் அரங்கேற்றத்திற்காக அம்பலவாணரிடம்
ஆசி வேண்டுகிருர்.

# "நாகேசுவரர் நான்மணிமாலை"

## (வடதிருநாகேசுவரம்)

### (வெண்பா)

உலகெலா மென்றே ஒலித்தது விண்ணில்
தலமெலாம் சைவம் தழைக்க—நிலமெலாம்
போற்றுதிருத் தொண்டர் புராணமருள் சேக்கிழார்
ஏற்றமிகு தாள்பணிவோம் இங்கு!

### கட்டளை கக்லித்துறை

இங்குநம் குன்றத்தூர் என்றும்
வணங்கியே ஏற்றமுற
அங்குறை நாளிலச் சோழர்தம்
நாட்டில் அரவுடனே
தங்கிய ஈசனை நாகே
சுரனைத் தனிப்பொருளாம்
சங்கரன் தன்னைக் கொணர்சேக்
கிழார்புகழ் சாற்றறிதே!

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

சேக்கிழார் நித்தமும் பாக்களை இயற்றவே
திருவாக்கில் நின்ற தேவா
ஆக்கவும் யாவையும் காக்கவும் ஊழியில்
அழிக்கவும் வல்ல ஈசா
மாக்களாய் வாழ்பவர் யாக்கைத னிலுமருள்
வழங்குதல் காண்பவர் யார்?
தாக்குவாய் கருணையால் நோக்குவாய் துயரினைத்
தணிக்குவாய் கண்டு ளேனே!

## நேரிசை ஆசிரியப்பா

கண்டங் கறுத்துக் கண்மூன் றுனவன்
கைலயங் கிரியில் கௌரியோ டுறைபவன்
அண்டம் படைப்பவன் அதுவா யிருப்பவன்
ஆதியந் தம்மிலாச் சோதியாய் நிற்பவன்
திங்கள் தரித்துக் கங்கையை யணிந்தவன்
திருநீற் றொளியிலே புவியெலாம் நிறைந்தவன்
திரிபுர மெரித்தவன் சுடலையி லிருப்பவன்
தீயேந் திகானிலே திருநடம் செய்பவன்
எண்திசை யுடுத்து ஏழுவி டங்கராய்
தென்திசை வந்தே தினமருள் புரிபவன்
எங்கும் இருப்பவன் இங்குவந் தேசிவ
லிங்கத் துள்ளே நிறைந்தருள் செய்தனன்
ஆகம முரைக்கும் ஆல்கீ ழமர்ந்தவன்
நாகத் தடியில் நாகேச ஞகினன்
அயனரி காணு தமர்ந்திடு
வடநா கேசனை வாழ்த்துவேன் யானே!

## வெண்பா

**யானோ**ர் இழிபிறவி யாகயான் என்னையே
**ஏனோ** உரைப்பதினி இப்புவியில்?—வானோரும்
**வாழ்த்**தென்றும் போற்றும் வடதிருநா கேசுரனைத்
**தாழ்த்**தண்டித் தாள்பணிவ தால்; 5

## கட்டளைக் கலித்துறை

**அண்ட**ங்க ளெங்கும் அதிர்ந்திட
வந்த அதிசயமாய்ப்
**பிண்ட**ங்க ளெல்லாம் பிறப்புறச்
செய்யும் பெருமையதாய்ப்
**பண்டெ**ம்மைச் சூழ்ந்துள பாவங்கள்
நீக்கிடும் பான்மையதாய்க்
**கண்டெ**ன்றும் நாகே சனைதினம்
வாழ்த்து கவினுறவே!

## எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**வாழ்**வதுநீ குன்றத்தூர் தனில்மட்டு மாயெங்கள்
மனக்கோயில் தனிலும் அன்றோ?
**தாழ்**சடையில் தாங்குவது கங்கைமட் டோமக்கள்
தருகரக நீரும் அன்றோ?
**வீழ்**வதுமுன் திருவடியில் முயலக னேயெம்மை
வீழ்த்துமும் மலமு மன்றோ?
**சூழ்**வதுனைத் தேவார மட்டுமோ சேக்கிழார்
துதித்திடு புராண மன்றோ? 7

## இணைக்குறள் ஆசிரியப்பா

புராணம் பற்பல புகன்றிடி னும்சிவ
புராணக் கூறுகளே!
சத்தி புராணம் எத்தனை கூறினும்
அத்தனை அணைந்தவள் அவளென அறிவோம்!
கந்த புராணம் சிந்தித் திடின்குகன்
வந்ததே ஈசனின் விழியென உணர்வோம்!
திருமால் புராணம் தனியெனி னுமவன்
சிவபெரு மானடி தேடுதல் கண்டோம்!
பதினென் புராணம் புவிதனி லிருப்பினும்
அதன்வழி யாவும் அரனை அடைவதே!
ஆதலின் அறிவீர்!
அயனரி அவனே! அம்பிகை அவனே!
மயிலவன் அவனே! மற்றுள தவனே!
நிலமாய் நீராய் நெருப்பாய்க் காற்ருய்
நிலவும் விசும்பாய் நிறைந்ததும் அவனே
ஏகனுய் இருப்பினும் யாவுமாய் வருபவன்
நாக நிழல்நா கேச்சுர னவனே!

## வெண்பா

நாகம் துயின்றோனே நாடியுறும் மைத்துனனும்
நாகம் அணிந்தவனே நாயகியாம்—நாகத்தை
ஏகே லெனக்கழுத்தில் ஏற்றுவந்தான் குன்றத்தூர்
நாகே சுரன்தனை நாடு! 9

## கட்டளைக் கலித்துறை

நாடும் சனகாதி சோதரர்
கேட்டது நான்மறையே...
தேடும் பதஞ்சலி காண
நடத்தல் திருநடமே....
நீடும் அகத்தியர் நாளும்
உரைத்தது நின்றமிழே....
பாடும் வடதிரு நாகேசு
ரன்கழல் பற்றிடவே! 10

## எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

பற்றற்றான் பற்றினையே பற்றி டென்றே
பகர்ந்திட்டார் வள்ளுவனார் படித்த துண்டு
முற்றுமதன் பொருளைநாம் நினைத்த துண்டா?
முழுப்பற்றும் அற்றவன்நா கேசன் றானே!
உற்றதொரு ஊழியிலே உயிர்க ளெல்லாம்
ஒடுக்கிசிவ லிங்கமதாய்த் தனித்து நிற்பான்!
சற்றிதனைச் சிந்தித்தே சிவாய வென்றே
சாற்றியக்கால் நீங்கும்நம் அகந்தை யெல்லாம்! 11

## நேரிசை ஆசிரியப்பா

அகன்றன காமனின் ஐங்கணை மாயைகள்
அழல்படக் கரிந்தவன் அநங்கனு மாகினன்
அழிந்தது தட்சனின் யாகமும் சிரமும்
அமரரும் உணர்ந்தனர் அரன்சினம் இதுவென;
எரிந்தன வெள்ளிபொன் இரும்பெனும் கோட்டைகள்
எரித்தது நெருப்பல இறைவனின் சிரிப்பே;
சரிந்தன இயமனின் சூலமும் பாசமும்
சாய்த்தது படையல சங்கரன் பதமே;
அறுத்தது ஜலந்திரன் சிரந்தனைச் சக்கரம்
அதுசுதர் சனமல அரன்தரு திருமண்;
உரித்தது கஜாசுரன் உடல்கொண்ட தோலே
உடையெனப் போனது உமாபதி மேலே:
நொறுங்கின இராவணன் தலைகளும் தோள்களும்
நொறுக்கிய திறைவனின் ஒருபெரு விரலே;
நடுங்கின புவிநான் முகன்சிரம் கொயுங்கால்
நான்முக னேனும் அரன்பழி தீதே;
விழுந்தது அந்தகா சூரனின் உடலம்
எழுந்தது அரகர வெற்றியின் படலம்;
விண்ணவர் தொழுது வேண்டிடக்
கண்ணுதல் பகைதனைக் கடிந்தரு ளினனே! 11

## வெண்பா

அருவமாய் நிற்பான் அடியவர் காண
உருவமாய் நிற்பான் உருண்டே—பெருமண்டம்
யாவும் அடங்காமல் ஐந்தெழுத்தில் தானடங்கி
மேவும் இறைவனை நீ வேண்டு! 12

## கட்டளைக் கலித்துறை

இறைவனைத் தேடியான் எங்கும்
அலைந்தேன் எதிரிலிலை
இறைவனெனைத்தேடி எங்கும்
தொடர்வதை எண்ணவிலை
நிறைவுடன் ஐம்பெரும் பூதத்து
லிங்கமாய் நின்றெனக்கு
உறைவிடம் காட்டிடும் நாகே
சுரனை உணர்ந்திலனே! 14

## ஆசிரியச் சந்த விருத்தம்

உணரு மடியவர் மனதினில்
உறைய மகிழ்வுடன் வருபவன்
உலகு முழுவதும் தொழுதிட
உருவம் பலவிதம் அமைபவன்

புணரி துயின்றிடும் அரியுடன்
பிரமன் பொருதிட எழுபவன்
புவியில் அரியவன் விழிதனைப்
புனையு மலரெனப் பெறுபவன்

திணறு பொழுதினில் துணையென
மனித வடிவினில் அருள்பவன்
திகழு பிறையுடன் நதிதனைத்
திரளும் கருணையில் அணிபவன்

நிணமும் குருதியும் பெருகிட
நிருதர் குலமறக் கடிபவன்
நிதமும் ஐவகை சபைகளில்
நிருத்தம் புரிந்திடும் நிமலனே! 15

## இணைக்குறள் ஆசிரியப்பா

நிமலன் அமலன் நித்தன் நிருத்தன்
விமலன் பரமன் விடையோன் சடையோன்
சங்கரன் சம்பு சயம்பு சதாசிவன்
அங்கணன் அனந்தன் அரூபி அநாதி
பிஞகி பிஞ்ஞகன் கபாலி காமாரி
அஞதி சூலி ஆரழ லாடி
அரன்வரன் சித்தன் அந்த காரி
பரன்பவன் பித்தன் புராரிபூ தேசன்
எத்தனைப் பெயர்கள் இட்டழைத் தாலும்
முத்தனை உணர்ந்திடும் முழுப்பொரு ளாமோ?
அவனே காண்பீர்!
நீலகண் டத்தன நீள்நஞ் சருந்தினன்
ஆலமர் தட்சிண மூர்த்தியாய் அமர்ந்தனன்
திங்களால் சந்திர சேகர ஞகினன்
கங்கையால் கங்கா தரப்பெயர் பூண்டனன்
பிட்சா டணனய்ப்
புலிதனை ஏவினல் துகிலென உடுப்பான்
அரவினை ஏவினல் அணியெனத் தரிப்பான்

மழுமான் ஏவினுல் திருக்கரம் எடுப்பான்
முயலகன் ஏவினுல் திருவடி மிதிப்பான்
நடரா சனுகி
உடுக்கையின் ஒலியிலே உலகெலாம் படைப்பான்
அபய கரத்தினுல் அகிலம் புரப்பான்
கொதித்தெழும் தீயினுல் குவலயம் அழிப்பான்
தூக்கிய அடியினுல் அருள்வான்
ஊன்றிய அடியினுல் மறைப்பான்
ஆங்கிவன் அறிவீர்
ஐந்தொழில் புரியும் ஐம்முகன் ஈண்டு
வந்தனன் வடநா கேசுர ஞகியே! 16

### வெண்பா

ஆவதும் எல்லாம் அழிவதும் ஈசனுல்
யாவரே காண்பார் அதன்பொருளை?—ஈவதவன்!
அக்கணிந்து பேய்களுடன் ஆடும்நா கேசனை
நெக்குருகி என்றும் நினை! 17

### கட்டளைக் கலித்துறை

நினையின் வருவான் நிதமும்
தருவான் நிகழ்வதெலாம்
தனையே இழந்து தலைவன்
அருளெனத் தானுணர்ந்தால்
வினைகள் அகலும் விளைவும்
தெரியும் விதிசரியும்
நினைவீர் வடதிரு நாகே
சுரன்கழல் நித்தமுமே! 18

### அறுசீர் விருத்தம்

நித்தியன் உலகில் எங்கும்
நிறைந்துளான் என்று காட்ட
அத்தினம் மயில்மேல் எம்மான்
அகிலத்தைச் சுற்ற லானுன்;
உத்தமன் தனக்குள் எல்லா
உலகமும் அடக்கம் என்றே
அத்தியோன் சுற்றி வந்தான்
அருங்கனி கார ணத்தால்!... 16

## நேரிசை ஆசிரியப்பா

காரண மாவான் காரிய மாவான்
பூரண மாவான் புண்ணிய மாவான்
கனிதனை யாங்கோர் காரண மாக்கிக்
காட்டினன் அரும்பெரும் தத்துவம் எளிதாய்!
பிச்சைக் காரனாய் பாத்திர மேந்தி
பிச்சையோ பிச்சை யெனக்குரல் கொடுத்துப்
பிச்சை நமக்கெலாம் இடுபவன் வந்தே
பிச்சை கேட்பதன் பொருளுணர்ந் தோமா?
அவற்குத் தேவை அகிலப் பொருளல
அணிகளும் மணிகளும் தந்தவன் அவனே
அவன்கேட் பதெலாம் அன்பரின் இதயம்
அதிலே பொங்கிடும் பக்தியும் நன்றியும்
அதைநாம் தருவதில் இழப்பே யில்லை
ஆனால் கிடைப்பதோ பிறப்பறும் இன்பம்
கூத்தன் என்று குவலயம் பேசிடும்
சாத்திர மறிந்தோர் சாற்றினர் அதன்பொருள்
நடராச னாடும் நாட்டியம் நின்றால்
நானில இயக்கம் யாவுமே நிற்கும்
ஆதலி னால்தான் ஐயன் நாமெலாம்
ஆடுதற் கென்றே தானாடு கின்றான்
நாமாடு மாட்டம் நமக்கல சொந்தம்
பேயோ டாடுவோன் பிணைத்துள பந்தம்
பித்தனு மானான் புவனம் பழித்திட
சித்தம் குலைந்தான் சசியைப் பிரிந்தே
இறைவனும் பெண்ணைப் பிரிந்திடும் போதில்
இந்நிலை தானா என்றே கேட்பீர்
தத்துவ முதலாம் தனிநாய கற்குச்
சக்தியைப் பிரிவதால் சங்கடம் இல்லை
பரத்தை அளிப்பவன் பரமன்; வாழ்வில்
இகத்தை அளிப்பவள் அன்னை ஆதலின்
தனியே தன்னினின் றவள்பிரிந் ததனால்

மனிதரும் போக உணர்வுகள் நீங்குவர்
என்றே யெண்ணி இறைபித் துற்ருன்
என்னே அவனருள் இந்நாள் உணர்வோம்
சீடனு மாளுன் சிறுவ னிடத்தில்
பூடக மாயிதன் பொருளினைப் பார்ப்போம்
பிரணவப் பொருளைப் பெயர்த்திட்ட வேதன்
சரவணன் சொல்லியா அதன்பொருள் அறிவான் ?
பெரியோன் சிறியோன் என்றிடும் பேதம்
அரிய ஞானத்தை அடைவதில் இல்லை
என்பதைக் காட்டவே எல்லா முணர்த்தவன்
தன்மகன் முன்னே தாழ்ந்து பணிந்தான்
குருவாய் அமர்ந்த தட்சிணு மூர்த்தி
முருகனின் முன்னல் சீடனய் நின்ருன்
செயக்கூ டாதன செய்தனன்
மயக்குறு மக்களை உணர்த்திட வந்தே! 20

## வெண்பா

வந்தான் அகத்தியன் வண்டமிழ் ஏந்தியே
எந்தைதாம் தென்திசை ஏகெனவே—சிந்தை
நிறைதமிழ் தன்ஞல் நிலம்சம மாகி
இறைபுகழ் நாட்டியது இங்கு 21

## கட்டளைக் கலித்துறை

இங்கே அமர்ந்திட்ட நாகே
சுரனே எளியவஞய்
எங்கும் அமர்ந்திட்டான் ஏதேதோ
பேருற்ருன்: இன்னருளால்
தங்கி அமர்ந்திட்டான் தொண்டர்தம்
நெஞ்சில்; தமிழ்முழங்கும்
சங்கம் அமர்ந்திட்டான் சாற்றும்
புலவர் சமமெனவே! 22

## பதிஞன்குசீர் ஆசிரியவிருத்தம்

சமராடல் போல்சொற் சிலம்பாடி கீரனுடன்
சபையினில் போட்டியிட்டாய்!
தமிழ்காக்க வேநின் நுதல்விழி திறப்பினும்
சழக்கென உரைக்க வைத்தாய் !
தமதுவறு மைத்துயர் களையெனும் பாணர்க்குத்
தகுந்ததோர் கவிவ டித்தாய் !
சங்கத்து ளோரெலாம் சரியகப் பொருள்காண
தனிமூங்கை உருக வைத்தாய் !

கமறுநரி பரிசெய்து கடுவெப்ப வைகையில்
கடிதினீர் பெருக விட்டாய் !
கமழ்கின்ற மணிவாச கன்தமிழ் கேட்டுநின்
கரங்களால் எழுதி வைத்தாய் !
நமதுபுகழ் பாடுகென மூவரைத் தேவாரம்
நற்றமிழில் பாடவைத்தாய் !
நலமெலாம் தமிழ்காண உலகெலாம் எனுமுதல்
நல்கியெம் அகத்து ளானே ! 23

## நிலைமண்டில ஆசிரியப்பா

அகத்தியன் கொடுக்கக் காப்பியன் வாங்கி
ஆண்டநற் பாண்டியர் சங்கத்தி லிருந்து
அகத்தையும் வகுத்துப் புறத்தையும் பகுத்து
ஆயிரம் பாடல்கள் கொடுத்திட மகிழ்ந்து
உலகம் தமிழை உணர்வதற் கென்றே
திலகம் எனப்புகழ் குறளெனத் திகழ்ந்து
இளமையை மறந்து அரசினைத் துறந்து
இளங்கோ வெனவரும் சிலம்பினிற் கலந்து
பரமனின் திருமுறை அரங்கனின் பாசுரம்
உரமிடச் சமய உயிரென நிறைந்து
எட்டுத் திசையல றீட்டி எழுபதால்
ஒட்டக் கூத்தனென் றுலாவில் உயர்ந்து
இகழேந்தி மீண்ட நளன்கதை உரைக்கப்
புகழேந்தி தந்த வெண்பாவில் நெகிழ்ந்து
திருத்தொண் டர்திறம் திகழ்ந்திடச் சேக்கிழார்
அருளிய பாக்களில் அழகுற அமைந்து
புவிதனில் பிறந்த பயன்தனை அருந்தக்
கவிமழை பொழிந்திடும் கம்பனில் சிறந்து
இம்மென எழுநூ றெனும்கா[illegible] மேகம்
செம்மாந் திரட்டையர் கலம்பகம் கனிந்து

சுடர்விடும் தேசியக் கவியென வாழ்ந்து
தொடர்வா ரிசுபா ரதியில் இணைந்து
புதுப்புது மலர்கள் பூப்பது போலே
நிதம்பல வடிவாய் நெடிது வளர்ந்து
பற்பல வகையாய் பக்தியை வளர்க்கும்
சிற்றிலக் கியமாய்ச் சிறந்து நிறைந்து
வளர்ந்தது தமிழே தமிழெங்கள் உயிரே
உயிரினும் பெரிதென உயர்ந்தது மொழியே
தமிழ்தனைத் தந்து தமிழ்க்குள் தானிருந்து
அமிழ்தம் ஈந்தனன் அருள்நா கேசனென்! 24

### வெண்பா

அருள்சேர் அமுதுண்டார் ஆளுடையார் எங்கும்
இருள்சேர் புறசமயம் ஏக-மருள்தீர்த்து
வெந்தணலில் வேகாமல் வைகையுடன் ஓடாமல்
எந்தையருள் சாற்றியதோடு ! 25

### கட்டளைக் கலித்துறை

ஏற்றிய கல்லே மிதந்திட
வைப்பார் எரியுறவே
நீற்றறை யிட்டால் இளவேனி
லாக்கி நிழல்தருவார்
கூற்றெனும் யானை குழைந்திடச்
செய்வார் கொடியநஞ்சை
மாற்றுவார் நாகே சுரர்வந்து
வாகீசர் மாண்புறவே ! 26

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

மாண்டு முதலே வாய்பு குந்த
மைந்தன் தன்னைத் தந்தனன்
பூண்ட காதல் பேசு தற்குப்
போகும் தூத னாகினன்
ஆண்டி யாகி அவைபு குந்து
அரிய ஓலை தந்தனன்
மீண்டும் சுந்த ரர்தி ரும்ப
யானை தந்த இறைவனே ! 27

### நேரிசை ஆசிரியப்பா

இறைவனைத் தந்தையாய்த் தலைவனாய்த் தோழனாய்
முறைகொண்டு தேவார மூவரும் உய்ந்ததும்
காண்டீபன் காணவே வேடனாய் வந்து
கானிலோர் ஏனத்தைக் கொன்றவன் ஓர்நாள்

கண்ணப்ப வேடனின் ஏனத்தி றைச்சியை
உண்டே பக்தியின் உயர்வை உணர்த்தலும்
கபாலஓடேந்தும் கபாலிமண் ணோட்டைக்
குயவராம் திருநீல கண்டர்பால் கேட்டதும்
ஒருபோதும் தனதிடம் குலபேதம் இலையெனத்
திருநாளைப் போவார்க்குத் தரிசனம் தந்ததும்
ஓரா யிரம்சிரம் ஒருங்கே கொய்தவன்
மாறு திந்நாள் மகனைக்கொய் வானு
என்றிங் கறிய இறைசிறுத் தொண்டனைத்
தன்மகன் உடற்கறி தாவெனக் கேட்டதும்
தந்தையின் கால்களைத் தடிந்தசண் டேசனின்
தந்தையாய்த் தமது நிவேதனம் தந்ததும்
பேயாய் வருகா ரைக்கால் பேயினைத்
தாயென் றழைத்துத் தாண்டவம் செய்ததும்
முற்பிறப் பிற்றனை வழிபடு சிலந்தியைக்
கற்றளி பலகாண் செங்கண ணாக்கிப்
பொன்மீன் அதிபத்தர் போக்கித் தொழுதிடத்
தன்னுதி ரங்கலி எண்ணெயாய்த் தந்திட
இவ்விதம் அறுபத்து மூவராம் நாயனுர்
ஒவ்வொரு வருக்கும் உவனருள் கிடைத்ததும்
சேக்கிழார் விரிவாய்த் தொண்டர் புராணப்
பாக்களால் தந்திடப் படித்தே மகிழ்ந்தோம்
அடியார் தொண்டினில் எதையுநாம் செயவிலை
ஆயின்நா கேசன் அருளின்றி உய்விலை
பிள்ளைக் கறிதவிர்: பெருமான் பக்திசெய்;
பேயாக வேண்டாம், பேசுக அவனையே;
உதிரம் வேண்டாம், உளநெய் ஊற்றுக;
உளவெலாம் வேண்டாம், உளம்நினைத் திடுக;
இவையே எமக்கிங் கருள்வாய்
நவையும் ஏற்கும் நாகே சுரனே! 28

### வெண்பா

ஏறே கொடியாக ஏறிடும் ஊர்தியாக
நீறே குறியாக நிற்பவன்—மாறேன்
வடதிரு நாகேசம் வாழ்விப்பேன் என்றே
திடமாய் அமர்ந்தனன் தேர்ந்து! **29**

### கட்டளைக் கலித்துறை

தேர்ந்து மகிழ்ந்திங் கணிந்தது
கொன்றை தெளிந்திடவே
சார்ந்திங் கெடுத்துத் தரித்தது
சாம்பல் சபைநடனம்
ஓர்ந்திங் கெழுந்து புரிந்தது
கானில் உமதடியார்
ஆர்ந்து வழிபட நாகே
சுரத்தில் அமர்ந்தவனே! **30**

### எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

அமர்ந்தசிவ லிங்கத்தை அரவத்தி சிலந்தியும்
அருச்சித்து முக்தி பெறுமே!
சமயத்தில் குரங்கொன்று சாற்றிடும் வில்வத்தால்
சகம்ஆள அரசு பெறுமே!
கமத்திலுறும் எலிகானில் திரிதனைத் தூண்டிடத்
தரணிபதி ஞலு முறுமே!
நமக்குமருள் சாருமே நாகேச னைப்பணி
நவிலுமா ணவமு மறுமே! **31**

## நிலமண்டில ஆசிரியப்பா

ஆணவம் முதலாம் அகமும் மலமறின்
ஞானம் வருமென நாளும் உணர்த்தும்
தென்னை நிறைந்து திகழும் எங்கள்
குன்றத் தூர்புகழ் குறித்திட எளிதோ?
மங்கை பாகன் மாச்சடை தன்னிற்
கங்கை சுரந்தெனக் கார்புகுந் தென்னத்
திரைகடல் போலே திரண்டு வந்துசெம்
பரம்பாக் கவேரி பாய்ந்து சூழ்வதால்
பசும்பட் டாடை பரப்பினுற் போல
விசும்பினை அளாவி நெற்கதிர் நிமிரும்
ஒவ்வொரு விதையாய் உயர்பயிர் வளர்ப்பார்
ஒவ்வொரு நூலாய் உடையினை வளர்ப்பார்
மனிதனின் அடிப்படைத் தேவைகள் அளிக்கும்
இனியயெம் ஊரிரு தொழில்களை இணைக்கும்
குன்றுகள் சூழ்தலால் குன்றத் தூரினை
என்றும் சேர நாடென ஏத்தலாம்
பாரும் வியக்கப் பரவும் நெற்கதிர்
சோறும் அளித்தால் சோணு டெனலாம்
சொற்றமிழ்ச் சுவைதரு சேக்கிழார் தோன்றலால்
உற்றதோர் பாண்டி நாடாய் உரைக்கலாம்
மும்மை நாட்டின் தன்மை நிரம்பலால்
செம்மைத் தமிழ்நா டென்றே செப்பலாம்
வடதிரு நாகே சுரன்வாழ் தலினுல்
திடமுடன் எண்டிசை தேவரும் தொழுவரென்! 32

## வெண்பா

எண்டிசை தன்னிலும் எங்கணும் கோயில்கள்
கொண்டே இலங்கிடும் குன்றத்தூர்–அண்டிய
அன்பரைக் காத்திடும் ஐங்கரன் நாகேசர்க்(கு)
இன்பமாக் காண்பான் எதிர் 33

## கட்டளைக் கலித்துறை

எதிரிட்ட சூரர் எமனுல
கேக எறிந்தசெவ்வேள்
வதிகின்ற குன்றம் ஒருபுறம்
நின்றிட வாழுமீசன்
துதிநின்ற தேவர் துயரினைத்
தீர்க்கத்தன் தூவிழியில்
உதிபெறச் செய்தான் குமரனை
செந்தமிழ் உய்வுறவே 34

## எண்சீர் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

உய்யநாம் உலகன்னை அனைத்தும் ஆனாள்
ஒருருவும் இல்லாதாள் அரனார் தேவி
செய்யபல வடிவுற்றாள் குன்றத் தூரில்
செம்பரம்பாக் கவேரியில் கன்னி யானாள்
துய்யதோர் எல்லைதனைக் காத்து நின்று
துலங்குமெழில் பொன்னியெனப் பேரும் பெற்றாள்
வெய்யவேம் புலியம்மன் ஆனாள் நாக
வீசர்பங் குற்றவன்றன் அருளைப் பூண்டாள்! 35

## இணைக்குறள் ஆசிரியப்பா

பூணெனக் கொண்டு பாம்புட னுறைபவன்
காணென வீதியில் திருவுலா வந்தனன்

எழுபரு வத்தினர் எங்கெங்கு மோகத்தில்
விழுவர் எழுவர் எனயான் உரைத்திடேன்
ஆத்திகர் கண்டே ஆனந்த முறுவதும்
நாத்திகர் சிலபேர் நச்சுரை பகர்வதும்
இரண்டின் இடையில் இருந்திடும் பலபேர்
ஏன்வீண் செலவென ஏதோ உரைப்பதும்
கண்டுளேன் தத்துவம் கண்டில ரதனல்
எண்ணத் துள்ளதை இயம்பலால் அயர்ந்தேன்
ஐம்பெரும் பூதத் தத்துவம் தேரே
அதையடக் கலிறை ஆரோ கணமே
உரைசிறி தெனினும் உணர்வில்தான் புரியும்
அரன்கழல் நினைவில் அதன்பொருள் தெரியும்
இறைவனின் திருத்தேர்
திடமாய்க் குன்றைப் பெருந்தெரு விட்டே
தடதட கடகட தாளமு டன்வரும்
அன்றுமுக மதியர் வாழ்ந்த அறிகுறி
இன்றும் குறிக்கும் தெருவினில் விரையும்
அச்சமுற் றும்பலர் அதிசயித் தும்காண
தச்சத் தெருதிரும்பி தயங்கா திவரும்
அடைக்கல மெனவரு பிறைதனைத் தரித்த
சடைப்பெரு மான்தெரு தடையிலா துருளும்
சின்னத் தெருவோ சிறுத்த தெருவதில்
சன்னம் சன்னமாச் சரிபார்த் துநகரும்
இவ்விதம் விரைவாய் இவர்ந்து
ஊரெலாம் சேர்ந்துதே ரிழுக்கும் காட்சி
பாரெலாம் கண்டுடல் சிலிர்க்கும் மாட்சி
இவைகாண் யானே
எங்கோ யிருந்தவன் இங்குவந் துறைந்தேன்
என்றுமுன் திருத்தேர் இழுப்பதில் உவந்தேன்
எங்குசென் ருலுமுன் இனியதேர் இழுக்க
இங்கெனைக் கொணர்வாய் எந்தைநா கேசனே! 36

### வெண்பா

நாகம் படமெடுத்து நண்ணும் சிவலிங்கம்
ஏகன் எனவே எழுந்தருள-போகசக்தி
ஏமாச லம்பற்றும் எம்பெருமான் தன்ஞேடு
காமாட்சி யாளுள் கனிந்து 37

### கட்டளைக் கலித்துறை

கனிதரு பெற்றவர் காட்சி
யளித்திடக் கண்டுவந்தே
இனியுநாம் வேறே இருத்தல்
அழகல எனவிரைந்தே
தனியொரு கோடனும் தமிழ்முரு
கேசனும் தங்கலுற்ருர்
பனிமலை ஈசன் குடும்பமும்
குன்றைப் பதிந்ததுவே! 38

### ஆசிரிய சந்த விருத்தம்

பதியென லிதுவென புவியினர் புகழ்ந்திட
பரந்தது வடதிரு நாகே சுரமே!
அதிசய மிதுவென அமரரும் தொழுதிட
அனுதினம் வருவது நாகே சுரமே!
கதியென பணிபவர் துயர்தினம் அகன்றிட
களைகளைக் களைவது நாகே சுரமே!
நதிதனை மதிதனை சடைதனி லணிபவர்
நகையெனும் அரவமர் நாகே சுரமே!

## நேரிசை ஆசிரியப்பா

நாகே சுரனுய் நாரிபா கனெனும்
மாதே சுரனுய் மகிதலம் காக்கும்
சர்வே சுரனுய்ச் சகலமும் புரியும்
சித்தே சுரனுய்ச் சீவனைச் சிவம்செயும்
பரமே சுரனுய்ப் பக்தருக் கருள்செயும்
ஈசனை எந்தையை இவ்விடம் கொணர்ந்து
சேக்கிழார் தந்திட செங்குந்த மரபினர்
ஊக்கமாத் திருப்பணி உவந்துசெய் திட்டார்
கோயில் உயர கோபுரம் உயர்ந்தன
கோட்டைச் சுவர்போல் குழுமின மதிற்சுவர்
ஏக லிங்க மாயமர் ஈசன்
நாக லிங்க மாயமர்ந் ததனல்
நாக லிங்க முதலியார் கோயில்
நடத்திட வந்துள நல்லதோர் நாளிதில்
எப்போ தும்பணி ஏற்பே னெனவே
குப்பு சாமி முதலியார் கூடினர்
அறுபான் மூவரைப் பாடியவர் ஆலயம்
அன்னவர் திருவுரு அமையா திருப்பதோ?
சீரார் கோயிலின் சூரிய புட்கரணி
நீராழி மண்டபம் பாரா திருப்பதோ?
என்றே யாவும் அமைத்திட எழுந்தனர்
எளியோன் எனைப்பா இயற்றப் பணித்தனர்
பன்னிரு திருமுறை பதிகம் கொண்டுள
எண்ணறும் பற்பல இன்னிசைப் பாடலால்
தீந்தமிழ் கேட்கும் சிவன்தோ டுடைச்செவி
வேம்பெனும் என்தமிழ் விரவுமோ அறியேன்
இருப்பினும் பிள்ளையின் உளரலை ஈன்றவள்
அருமை யெனவே அகமகிழ் தலைப்போல்
உலகெலாம் பெற்றவன் உவப்பான் என்றியான்
கலக்கம் நீங்கினேன் கவிதை பாடினேன்
இப்புவி மீதுநா கேச்சுர முயர

குப்புசா மியோடிங் கிணைநா கலிங்கம்
செய்திருப் பணிகள் சிறந்துமிக் கோங்குக!
வையகம் மீதவர் வாழ்கபல் லாண்டே!
பூலோகக் கைலைப் புகழ்குன் றத்தூர்
நாகே சுரமென நாவெலாம் ஓதுக!
வாழ்கசெந் தமிழ்க்கு வாழ்வருள் சேக்கிழார்!
வாழ்க சிவப்பணி வளர்செங் குந்தர்!
வாழ்க நாகேசம் வாழ்ந்திடும் மாந்தர்!
வாழ்க....வாழ்க.... வாழ்க...
மன்னிய உயிர்கள் வாழும் உலகெலாம்!



# காமாட்சி இரட்டை மணிமாலை

## வெண்பா

அருள்மிகு காமாட்சி அம்மையே என்றும்
தரும்நிழ லாகிய தாயே—ஒருபோதும்
நாகேச ரைப்பிரியா நாயகியே உன்னையன்றிப்
போகேன்யான் வேறு புகல்! 39

## கட்டளைக் கலித்தொகை

புகலென வந்தால் அபய
மளித்திடும் பொற்கரமும்
தகவுறச் சென்றால் வரத
முரைக்கும் தளிர்க்கரமும்
திகழுறு அங்குச பாச
கரங்களும் தேற்றவருள்
புகழுறு தாய்வட நாகேச
முற்றனள் போற்றுவமே!

## வெண்பா

நாமே தனியென்ற நாகே சுரர்தம்மை
காமே சுரராக்கும் காமாட்சி—பூமேவும்
பாணங்க ளின்றியே பார்வையில் வென்றனை
காணவெனில் குன்றத்தூர் காண்க! 40

### கட்டளைக் கலித்துறை

காணக் கருணைத் திருமுகம்
வாழ்வைக் கனியவைக்கும்
பூணத் திருவடித் தாமரை
நம்மைப் புனிதராக்கும்
மாண சிவப்பிர காசசு
சுவாமி மனமுருகி
வேண அருள்பெற குன்றையூர்
அன்னையை வேண்டினரே!

### வெண்பா

அன்பே சிவமாய் அமர்ந்தார் அருகிருந்தும்
என்பும் தலையோடும் ஏந்திநின்று—அண்டமெலாம்
ஆங்காரம் கொண்டெழுந்த அன்னைகுன் றத்தூரில்
பாங்காக காட்சிதந்தாள் பாடு!

### கட்டளைக் கலித்துறை

பாடுவார் யாரும் பிறவாத
யாக்கைப் பரமனென்றே
நாடுவாள் அன்னை பிறவிகள்
யாவும் நலமெனவே
சூடுவாள் மீண்டும் இறைவர்க்கு
மாலை சுமங்கலியாய்!
தேடுவோம் நாம்நம் பிறவிகள்
தோறுமத் தாய்தனையே!

### வெண்பா

தாயாய்ப் புவிதனைத் தந்தாள் இமவானின்
சேயாய்ப் புவியில் திகழ்ந்திட்டாள்—மாயாவாம்
தான்பெற்ற பூமியில் தானே மகளானாள்
சான்றிதற்கு ஏதுண்டோ சாற்று! 7

### கட்டளை கலித்துறை

சாற்றும் கருமையால் காளியென்
    ருரீசன் சற்றுநொந்து
தூற்ற லெனவேகி வெண்ணிறக்
    கௌரியாய் தோன்றிவந்தாள்
போற்றும் மலைமகள் பச்சைவண்
    ணத்தால் புகழடைந்தாள்
தேற்றமாய் காமாட்சி வண்ணம்
    எதுவெனத் தேர்ந்திலேனே!

### வெண்பா

வண்ணத்தில் வெவ்வேறாய் வையத்தில் தோன்றிடினும்
எண்ணத்தில் ஒன்றாகும் எம்மன்னை—மண்ணில்
அறக்கருணை யால்நம்மை ஆட்கொள்வாள் மாறின்
மறக்கருணை யால்காப்பாள் மதித்து!

## கட்டளைக் கலித்துறை

காவெனச் சொல்லல் கலைமக
ளாகும் கனிவுடனே
மாவெனச் சொல்லல் திருமக
ளாகும் மகிழ்வுறவே
நாவெனல் காமட்சி யென்றே
தினமும் நவில்வதனுல்
தாவெனக் கல்வியும் செல்வமும்
சேரும் தவத்திஞலே

## வெண்பா

தவம்புரிந்தாள் முன்னம் தழலில்மாங் காட்டில்
அவம்விலகி கச்சி அமர்ந்தாள்-உவந்தே
வரம்தர குன்றத்தூர் வந்தாள் அபய
கரத்துடன் காமாட்சி காண்!

## கட்டளைக் கலித்துறை

காண்பார் வியக்க இருநாழி
நெல்லால் கருத்துடனே
பூண்டதோர் முப்பத் திரண்டறம்
செய்து புகழடைந்தாள்
ஆண்டிகு ளைந்திட ஆற்றில்மூழ்
காமல் அணைத்திருந்தாள்,
வேண்டுவோம் நாகே சுரமே
நடந்து விரைவுடனே!

## வெண்பா

நடனத்தில் போட்டியிட்டு நாயகர்பேர் நிற்க
இடம்விட்டுத் தோல்வியை ஏற்ருய்-திடமாய்
உனதெளிமைப் பெண்கள் உணர்ந்தால் உயர்வர்
மனதிலுறும் மாயம் மறைந்து! 13

## கட்டளைக் கலித்துறை

மாயவன் தங்கை பிறந்தவீ
டேதெனில் வைணவமே
தாயவள் சென்ற புகுந்தவீ
டேதெனில் சைவமதே
மேயனற் பாலமாய் அன்றே
இணைத்தாள் இயல்புடனே
தூயவர் ஆய்ந்தால் சமயப்
பொதுமை துலங்கிடுமே! 14

## வெண்பா

துலங்கு மெழில்வடிவம் துட்டனும் மகிட
விலங்கை வெறிகொண்டு வீழ்த்தி-வலம்வந்தாள்
தேவர்கள் சக்தி திரண்டது கௌசகியாய்
யாவரும் காமாட்சி யாளுள் 15

## கட்டளைக் கலித்துறை

யாதும் அவளேதான் யாவரும்
  தாயேதான் யாங்கணுமே
மாது வரக்காணின் மாதா
  யெனவே மதித்திடுவீர்
ஈது புவியினில் அன்னையின்
  சேவை எனவுணர்ந்தால்
ஏதும் குறையின்றி என்றும்
  அருள்வாள் இகபரமே 16

## வெண்பா

இகத்தை விரும்பிடேன் என்னும் பிருங்கி
அகத்தை விலக்கவரன் ஆகம்-திகழ
இணைந்தே இடபாகம் என்றமைந்தாள் அன்னை
துணைக்கோர் சமபாகம் சூழ்! 17

## கட்டளைக் கலித்துறை

அன்றெனை ஈன்று புவிக்கு
  அளித்திட்ட அன்னையவள்
இன்றெனை நீங்கி எமனுல
  கேகினள் என்றயர்ந்தேன்
நின்கழல் சேர்ந்து நினக்குள்
  அவளை நிதமுணர்ந்தேன்
நன்கிதைத் தேர்ந்தவர் ஈன்றுளைப்
  பேணுவர் நானிலத்தே! 18

## வெண்பா

நானிலத் தேவட நாகேசத் தின்பெயர்
மேனிலை யுற்றே விளங்கத்-தானிங்கே
தேடிவந்தாள் காமாட்சி செம்மையுற நம்குடும்பம்
நாடிவந்த ருள்அர்த்த நாரி! 19

## கட்டளைக் கலித்துறை

அர்த்தநாரி யாயிணைய அன்று
தவம்செய்த ஆலயந்தான்
அர்த்தமுள நாகேசம் ஆனதென
அன்னை அருளவந்தாள்!
அர்த்தசந்தி ரன்தங்கும் காஞ்சியில்
தங்கிய அம்பிகைதான்
அர்ச்சிக்கும் குன்றத்தூர் வந்தனள்
வாழ்வோம் அவள்நிழலே! 20



# விநாயகர் திருத்தொகை

## கலிவெண்பா

வடதிருநா கேசத்தை வாழ்விக்க வந்தே
திடமுடன் சார்ந்துள்ள தேவா-தடக்கையாய்

எங்கும் நிறைந்தே இருந்திடும் நீயிங்கு
செங்குந்தப் பேரால் சிறப்புற்ருய்—பொங்கிடும்

சுட்டித் தனத்தால் தொடங்குவாய் யாவுமதில்
குட்டி யெனும்பெயரும் கொண்டிட்டாய்—இட்டமுறு

தந்தமொன் ருயினும் தாங்கும் எழிலாலே
சுந்தர னென்றே திகழ்ந்திட்டாய்-விந்தையாய்

ஆதார மாவாய் அனைத்திற்கும் என்பதனல்
பாதாள னென்றும் பெயருற்ருய்-தோதாக 10

சாத்திரம் ஆய்ந்தோர் சரண்புக வந்திடும்
க்ஷேத்திரவி நாயகா செம்மலே-தோத்தரித்தோம்

ஆனை வடிவுற்ருய் அங்குசம் கையேந்தி
நானை அடக்கும் நலமுரைத்தாய்-ஏனைச்

செயிற்றுமொரு கொம்பில் சுழித்துத் தொடங்கி
வயிற்றை யடைந்து வலமாய்-உயிற்றிடும்

ஓங்கார வட்டம் உருவத்தால் காட்டியே
நீங்காதெம் நெஞ்சில் நிலைத்திட்டாய்-பாங்காக

அண்டங்கள் யாவும் அடங்கும் வயிற்றிலெனக்
கண்டோம் பெருவயிறுன் காட்சியிலே-தொண்டருக்கு 20

நீண்ட செவியால் நெடுந்தூரம் நேர்ந்தனவும்
ஈண்டே யறிந்தங்கு ஏகிடுவாய்-மாண்புடனே

எம்மகத்தில் ஞானம் எழுந்து பெருகுதற்கு
மும்மதம் கொண்டெதிலும் முன்னின்ருய்-செம்மையாய்

ஐந்தொழில் செய்யுமுன் ஆற்றல் உணர்த்தவோ
ஐந்து கரனாய் அமைந்திட்டாய்-நைந்தார்க்காய்

எங்கும் எழுந்தருள்வாய் ஏதும் அளித்திடுவாய்
மங்கலமாய் நற்பணிகள் வாழ்விப்பாய்-தங்கியே

நம்பிய ஔவையின் நற்றமிழ் கேட்டுவந்து
தும்பிக்கை யால்கைலே சூழ்வித்தாய்-கொம்பொன்றை 30

பாரதத் திற்காய் பதருமல் தானொடித்து
தீரமாய் வேகமுற தீட்டினாய்-சாரவே

நற்கரகம் தான்கவிழ்த்து நாடும்நீர் ஓடவைத்து
அற்புதக் காவிரியை ஆங்கருளி-பொற்பதத்தைப்

போற்றும் அகத்தியர் பொல்லாங் குரைத்துந்தன்
மாற்றமறி யாமல் மறித்தங்கு-சீற்றமுடன்

குட்ட வருகையில் கொண்டாய் சுயவடிவம்
குட்டிக்கொண் டார்தாமே கும்பமுனி-இட்டமுடன்

யாரிதனைச் செய்திடினும் யாண்டும் அருள்தருவாய்
பாரிவிதைச் செய்வார் பயனுறுவார்-நேரிடவே 40

ஏயநாய கர்நிகர் இல்லாய் விநாயகா
ஆயபுகழ் இஃது அமையுமோ?-நாயகனே

பிள்ளைகள் எங்கும் பிறந்தாலும் இவ்வுலகில்
பிள்ளையார் என்றுயார் பேர்பெற்ருர்?-விள்ளவே

எக்கணத்தில் செய்தொழிலில் எக்குறைகள் வந்திடினும்
விக்கினங்கள் தீர்த்துவைக்கும் விக்கினேசா-தக்கக்

கணங்கள் யாவுமே கைகூப்பும் எங்கள்
கணபதி யேநாங்கள் காண-குணமாய்

எதற்கும்நீ காப்பாவாய் இன்றுனைப் பாடும்
இதற்கும்நின் காப்பு இலங்கும்-நிதமும்யாம்

5

பிள்ளையார்க் கென்றே பெரிதாய் முதற்சுழியை
தெள்ளவே தீட்டல் தெரியாதோ?-உள்ளத்தால்

எத்தெய்வம் வேண்டிடினும் ஏதோஓர் நல்வடிவம்
நித்தமும் கொள்வார்கள் நீணிலத்தில்-உத்தமனே

நின்னுரு வேண்டில் நிகழ்மஞ் சளேபோதும்
அன்றதனில் வேண்டும் அருகம்புல்-அன்றன்னை

மஞ்சளால் உன்னை வடித்தத னல்தானே
தஞ்சம் புகுவாரும் தாமமைத்தார்-நெஞ்சிலுறை

அன்னை பராசக்தி ஆங்கெழுந்து நீராடத்
தன்னந் தனிமையில் தான்செல்ல-முன்ஞெருநாள்

நீராடும் போதில் நிமலனர் வந்துதன்னை
நேராகக் கண்ட நினைவுவர-சீராக

மாதர்நீ ராடுகையில் மாலையிட்டா ரென்ருலும்
போதல் முறையல்ல பூவுலகில்-போதமிதை

யாவருக்கும் காட்ட அரனைத் தடுத்து
காவலொன்றை வைக்கக் கருதினள்-ஆவலுடன்

மஞ்சள் அரைத்து வழித்துத் திரட்டிவைத்து
நெஞ்சம் குளிர நெகிழ்வோடு-கொஞ்சியே

பிள்ளாய் எனவழைக்கப் பிள்ளையா ராய்வந்தாய்
அள்ளி யணைத்திட்டாள் அம்பிகை-உள்ளம் 70

மகிழ்ந்தே உனைத்தன் மடிமீ திருத்தி
மகிமையால் தோன்றிய மைந்தா-அகிலத்தில்

தாய்க்கு முதல்காவல் தன்மைந்தன் தானென்று
ஆய்ந்தெவரும் காண அமைந்திடுக-தோய்ந்தென்றும்

என்காவல் மட்டுமல்ல இன்றுமுதல் யாவருக்கும்
நின்காவல் சூழ்ந்து நிலைத்திடுக-இன்றிங்கு

மெல்லவே வந்துள்ளே செல்ல முயல்வாரை
நில்லென்றே சொல்லி நிறுத்திவிடு-அல்லால்

விலக்கியே மேலும் விரைய முயன்றால்
கலக்கமின்றிக் கைத்திறனைக் காட்டு-நலமழிய 80

யாருன்னைத் தொட்டாலும் யானவரை மீளவிடேன்
பாருளோர் அஞ்சும் பயங்கரியாள்-போருற்றால்

இத்தண்டம் கொண்டே எவரையும் வீழ்த்திடுக
சத்திய மீதென்றே சங்கரியாள்-அத்தினத்தில்

அங்காளம் மைகொள்ளும் ஆயுதங்கள் மூவாறில்
இங்கோர் கதாயுதத்தை ஈந்தபின்னர்-சங்கையின்றி

நீராட்டம் கொள்வதற்கு நிம்மதியாய்ச் சென்றனள்
போராட்டம் வெல்வான் புதல்வனென-சீராக

உன்திறம் அங்கே உலகத்தார் காண்பதற்கே
அன்றந்த வேளை அரன்வந்தார்-நின்றநீ 90

நில்லென்ருய் தந்தையயே நீயார் எனவினவ
சொல்லுக் கிடமில்லை தூர நில்-செல்லென்ருய்

என்னே வியப்பு எனையோர் சிறுபிள்ளை
என்னென் னவோகூறி ஏகென்ருன்-இன்றிவனின்

வீரம் அறியவேண்டும் வீண்சண்டை ஒன்றிங்கு
நேர வழிவகுத்து நின்றிடுவோம்-சாரமிதே

என்றே சிவபெருமான் ஏவிஞர் தம்கணங்கள்
அன்னவரும் செல்ல அமர்க்களத்தில்-நின்றெதிர்த்தாய்

மூண்டதோர் யுத்த முடிவில் சிவகணங்கள்
பூண்டபெருந் தோல்வி புகல்வதோ?-மீண்டுமங்கே 100

நந்தியும் வந்தான் நடந்த சிறுபோரில்
தந்திரங்கள் செய்துதான் தப்பித்தான்-சிந்தையில்

வஞ்சம் மிகுந்தவனும் வானவர் காவலனை
கெஞ்சி அழைத்துவந்தார் கேடுற்ருன்-அஞ்சியே

இந்திரனும் ஓட இனியேது செய்வதென
நொந்து மலரவனை நுட்பமாய்-சிந்திக்க

வந்து பிரம்மாத்ரம் வாகாய் தொடுத்திட்டார்
உந்தும் எதிர்ப்பால் ஒளிந்திட்டார்-சந்ததமும்

மாயப்போர் செய்தற்கு மாயவனே சாலுமென
நேயதிரு மாலை நினைந்திட்டார்-தீயவரை 110

வெல்லலாம் சக்தியின் வீரமைந் தன்தன்னைக்
கொல்வதெனல் கண்ணனுல் கூடுமோ?-சொல்லவே

நாணமுற் றூர்கைலை நாதருக்கு முன்சென்று
காணவே அஞ்சிக் கலங்கிநின்றூர்-மாணவே

எல்லோரும் தோற்றூர் இளையோ னிடமென்று
கல்லாலின் கீழமர்ந்தார் கண்டுணர்ந்து-மெல்லவே

நின்று களத்தில் நெடுநேரம் போர்புரிந்து
வென்று சிரந்தனை வீழ்த்திஞர்-கொன்றூர்

மகனை யெனலும் மகாசக்தி பொங்க
ககனம் கலங்கவந்தாள் காளி-அகம்நடுங்க 120

சண்டி எழுந்தாள் சாமுண்டி தான்புகுந்தாள்
அண்டமதிர துர்க்கையும் ஆர்ப்பரித்தாள்—மண்டலம்

யாவும் திசைமாற யாவருமே வீழ்ந்துபட
மேவும் குருதியில் மூழ்கடித்தார்—சாவுறுமல்

மிஞ்சியோர் ஓடிஞர் மீளவழி காணுமல்
தஞ்சமென நாகேசர் தாள்பணிந்தார்-அஞ்சற்க

என்றப யம்தந்தே ஏற்றயா னைச்சிரம்
நன்றெனவே நல்கவந்த நாயகா-பின்னெருநாள்

தன்போல் உருவால் தருக்குற்ற தோரசுரன்
தன்னையே மூசிகமாய் தாங்கவைத்தாய்-என்றுமே 130

பெற்றவர் மேன்மை பெரிதெனத் தான்வணங்கி
உற்றகனி கொண்டு உயர்வுற்ருய்-நற்பரனே

பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்தளித்த நற்ருய்க்கு-சீலமுடன்

சங்கத் தமிழ்மூன்றும் தந்திட்டாய் எந்நாளும்
இங்குயான் ஈதல் எடுத்துரைப்பேன்-செங்கரும்பு

அப்பம் அதிரசம் ஆங்கவல் சர்க்கரையும்
செப்பும் பொரிகடலே சேர்துவரை-ஒப்பவடை

இத்தனையும் ஔவை இனிதாகத் தந்தவையும்
மொத்தமாய்ச் சேர்த்து முழுவதுமே-இத்தினத்தில் 140

தந்தே வணங்கிடுவேன் தாய்க்களித்த முத்தமிழில்
சந்ததம் ஒன்றேனும் தந்தருள்வாய்-வந்துன்னைப்

பற்றச் சனிதொடர்ந்தால் பாங்காக நாளைநீ
உற்றிடுவாய் என்றே உரைத்திடுவாய்-முற்றுமங்கு

நாளைநாளையென்றே நாட்கள் கழித்துவிட்டாய்
தாளைப் பிடித்தயெமைத் தான்பற்றும்-வேளையிலும்

நீயவனை யெம்மை நெருங்காது காத்திடுவாய்
தீயவை யாவையும் தீர்த்திடுவாய்-தூயவனே

எங்கும் முதலாகி என்றும் நலமருள்வாய்
இங்கும் முதலாவாய் இன்று! 150

# சுப்பிரமணியர் திருப்பள்ளியெழுச்சி

## (எண்சீர் விருத்தம்)

ஓமென எழுந்தது புவிமுதல் ஒலியே
ஓமென அமைந்தன அண்டங்கள் யாவும்
ஓமெனத் தோகையை விரித்தது மயிலும்
ஓமெனக் கொக்கரக் கோவெனும் கோழி
ஓமெனல் வடநாகே சத்தினில் கேட்க
ஒன்றிய சுப்பிர மணியெனும் இறைவா
ஓமெனும் தத்துவம் உரைத்தவ னன்றோ?
ஒண்மணி யேபள்ளி எழுந்தரு ளாயே! 1

பரமனின் விழிகளில் அறுவுரு வானாய்
பார்வதி அணைப்பினில் ஒருவடி வானாய்
சுரரொடு தளபதி எனவருள் தந்தாய்
சூழ்ந்ததோர் கலிக்கென ஆண்டியாய் சென்றாய்
பிரம்மமாய் வடநாகே சத்தினில் என்றும்
பிணைந்துள சுப்பிர மணியெனும் தேவா
பரத்திலும் இகத்திலும் அருள்பவன் நீயே
பரம்பொரு ளேபள்ளி எழுந்தரு ளாயே! 2

உதித்தது செங்கதிர் உன்னரு ளாலே
உதயத்தைத் தந்தவன் உறங்கிட லாமோ?
அதிர்ந்தன முரசங்கள் உன்புகழ் பாடி
அறிதுயில் கொண்டவன் மருகனே எழுவாய்
பதிந்தனை வடநாகே சத்தினில் வந்தே
பாட்டுடைச் சுப்பிர மணியெனும் தலைவா
கதியிலை யெனவுனைக் கைதொழு தோமே
காத்திட வேபள்ளி எழுந்தரு ளாயே! 3

கொடிமீதில் நீதாங்கும் கோழியெ ழுந்தே
கூவுதல் நின்செவி கேட்டிலை ஏனோ?
துடிதோகை மயிலுன்முன் தோகைவி ரித்தே
தொடங்கிடும் நடனமும் கண்டிலை தானோ?
நொடியேனும் வடநாகே சத்தினை விட்டே
நீங்காத சுப்பிர மணியெனும் நிதியே
படித்திடும் ஔவையின் பாட்டிலு கந்தாய்
பாவல னேபள்ளி எழுந்தரு ளாயே! 4

அழகென்னும் வடிவாகி அமர்ந்திடும் முருகா
அறிவென்னும் வேலேந்தி அருள்தரும் குமரா
பழமென்னும் பெயரோடு நின்றிடும் பரனே
பதியெங்கும் மலைநாடி இருந்திடும் குகனே
தொழயெங்கள் வடநாகே சத்தினில் வந்தே
தோன்றிடும் சுப்பிர மணியெனும் அமுதே
கழற்வதுன் பெயரன்றி வேறிலை யய்யா
கழல்பணிந் தோம்பள்ளி எழுந்தரு ளாயே! 5

வானிடைத் தேவரைக் காப்பதற் கென்றே
வந்தனை யென்றனர் புராண முரைப்போர்
மானிடர்க் காவலும் இங்கினி யாரோ?
மறந்தனை யோயெமை செந்தமிழ்ச் செல்வா
நானினி வடநாகே சத்தினில் தங்கி
நலந்தர சுப்பிர மணியென வாழ்வேன்
ஏனினி கலக்கமென் றருள்செயும் புலவா
இனியவ னேபள்ளி எழுந்தரு ளாயே! 6

நெருப்பினில் கருவாகி நின்றவன் நீயே
நீரினில் உருவாகி வந்தவன் நீயே
தருக்குறும் பிரமனை சிறைதனில் பூட்டி
தந்தைக்கும் உபதேசம் தந்தவன் நீயே
விருப்பொடு வடநாகே சத்தினில் வந்தே
விளங்கிடும் சுப்பிரமணி மணியெனும் குருவே
அருந்தமிழ் குறுமுனி அகத்தியர்க் கருளும்
ஆரமு தேபள்ளி எழுந்தரு ளாயே! 7

ஐந்தினில் உருவாகி அமைந்தவன் நீயே
ஆறினில் பொருளாகி நிறைந்தவன் நீயே
கந்தனென் றேயுனை மலைமகள் சேர்க்க
கமலங்கள் ஆறினில் இருந்தவன் நீயே
சந்ததம் வடநாகே சத்தினில் வந்தே
தங்கிடும் சுப்பிர மணியெனும் ஒளியே
செந்தமிழ் அருணகி ரிக்கென அருளும்
தெள்ளமு தேபள்ளி எழுந்தரு ளாயே! 8

குன்றென நின்றிடும் கிரௌவஞ்சகன் தன்னைக்
கொன்றனை அமரரைக் காப்பதற் கென்றே
பின்னொரு நாளினில் பூதம்பி டிக்கப்
பிளந்தனைக் குன்றினைப் கீரனைக் காக்க
இன்றெங்கள் வடநாகே சத்தினில் நின்றே
எமக்கருள் சுப்பிர மணியெனும் தந்தாய்!
அன்றொரு திருமுருகாற்றினைக் கேட்டே
அருள்தந்த வாபள்ளி எழுந்தரு ளாயே 9

இறையனு ரகப்பொருள் உரைகாண் பதற்காய்
ஊமைநீ யாகினை என்றனர் சிலபேர்
குறையொடு ஊமையாய் பிறந்திட்ட பிள்ளை
குமரகு ருபரன் பாடிட வைத்தாய்
உறைந்திட வடநாகே சத்தினில் வந்தே
உவந்தருள் சுப்பிர மணியெனும் தாயே!
முறையுடன் உனைத்தொழ தமிழ்தனை அருள்வாய்
முழுமுத லேபள்ளி எழுந்தரு ளாயே! 10

கொடுமைகள் புரிந்திடும் சூரனைக் கூட
கொன்றிலை கூறிரண் டாக்கியே வைத்தாய்
அடுசமர் புரிந்தனர் தேவரும் ஓர்நாள்
அவர்களைக் காத்திடும் பொறுப்பினை ஏற்றாய்
சடுதியில் வடநாகே சத்தினில் வந்தே
சார்ந்துள சுப்பிர மணியெனும் சிவமே!
எடுஒரு பாட்டென பொய்யாமொ ழிப்பா
ஏற்றவ னேபள்ளி எழுந்தரு ளாயே! 11

வள்ளிமண் மீதினில் வாழ்ந்தத னாலே
வாழ்த்துவள் இகத்தினில் வாழ்வினைத் தந்தே
தெள்ளிய விண்ணுறை தேவானை வந்தே
தேற்றுவள் பரத்தினை தந்தெமை யங்கே
ஒள்ளிய வடநாகே சத்தினில் வந்தே
உறைந்துள சுப்பிர மணியெனும் குருவே!
உள்ளமு ருகியே உனையழைத் தோமே
உத்தம னேபள்ளி எழுந்தரு ளாயே! 12

ஆறுப டைவீடு அமர்ந்தனை யென்பார்
அளவற்ற உளங்களில் அமர்ந்தனை யன்றோ?
கூறுமுன் உறவுகள் துறந்துநீ சென்றாய்
கூடிடும் அடியவர் உறவுநீ யன்றோ?
ஆறுதல் வடநாகே சத்தினில் நின்றே
அளித்திடும் சுப்பிர மணியெனும் குருவே!
மாறுதல் உறினும்நீ தமிழ்க்கென அருள்வாய்
மன்னவ னேபள்ளி எழுந்தரு ளாயே! 13

காவடி யாயிரம் தூக்கிதம் தோளில்
காத்திருந் தார்பலர் தேவனின் வாயில்
சேவடி தொழுவதே வாழ்வெனக் கொண்டே
சேர்ந்திருப் பார்பலர் நின்படை வீட்டில்
தேவனே வடநாகே சத்தினில் எம்மை
தேற்றிடும் சுப்பிர மணியெனும் மதியே!
காவல்நீ யன்றியார் காத்திட எழுவாய்
கண்மணி யேபள்ளி எழுந்தரு ளாயே! 14

குழந்தையின் வடிவினில் வருபவ னன்றோ!
குமரனின் வடிவினில் அருள்பவ னன்றோ!
கிழவனாய் வள்ளியைக் கவர்ந்தவ னன்றோ!
கேட்டிடும் வடிவெலாம் கொண்டவ னன்றோ;
பழமென வடநாகே சத்தினில் வந்தே
பதிந்திடும் சுப்பிர மணியெனும் அழகே!
எழயினும் தாமதம் செய்திடல் நன்றோ!
என்தலை வாபள்ளி எழுந்தரு ளாயே! 15

சிவகிரி சக்திகி ரியெனும் மலைகள்
திடமுடன் இடும்பனும் தாங்கினன் தோளில்
அவனுறு பிரம்மதண் டமெனும் வடிவில்
அமைந்தன காவடி நின்திரு வடியில்
கவினுற வடநாகே சத்தினில் நின்றே
காத்திடும் சுப்பிர மணியெனும் பாலா
நுவல்வதுன் பெயரன்றி வேறிலை யய்யா
நுண்பொரு ளேபள்ளி எழுந்தரு ளாயே! 16

வெல்வது வேயொரு வேலென வாகும்
மேதி னி மீதினில் ஞானம தாகும்
அல்லவை செய்திடும் ஆணவ கன்மம்
அற்றிட மாயையும் நீக்கியே ஏகும்
தொல்புகழ் வட நாகே சத்தினில் வந்தே
துலங்கிடும் சுப்பிர மணியெனும் வேதா
நல்குவை எமக்குநீ நல்லன யாவும்
நாயக னேபள்ளி எழுந்திரு ளாயே ! 17

நீலம யில்நினை நெருங்கிய தாலே
நிகழுத யச்செம்மை காண்கிலை இங்கே
கோலமும் செவ்வியன் என்பத னாலே
குறித்திலை கதிரவன் ஒளியிது வென்றே
சீலமாய் வடநாகே சத்தினில் வந்தே
சேர்ந்துறை சுப்பிர மணியெனும் அருளே
காலமெல் லாம்நினைந் துருகியே நின்றோம்
கருணையு ளாய்பள்ளி எழுந்தரு ளாயே' 13

கற்பியல் களவியல் எனத்தமிழ் ஏட்டில்
காட்டிய இருமணம் புரிந்தவ னன்றோ?
பொற்புறும் காதலும் வீரமும் நாட்டி
புகழுறும் அகம்புறம் படைத்தவ னன்றோ?
அற்புத வடநாகே சத்தினில் வந்தே
அமைந்துறை சுப்பிர மணியெனும் சீலா
கற்பன யாவுமுன் கருணையி லன்றோ?
கடலமு தேபள்ளி எழுந்தரு ளாயே! 19

நூற்றெட்டுத் திருப்பெயர் கொண்டவ னன்றோ?
நுவன்றிட எங்குமே உறைபவ னன்றோ?
போற்றிடும் ஒருபெயர் முருகனென் றிங்கே
போதாதோ அனைத்துமே அதிலுறு மன்றோ?
ஏற்றனை வடநாகே சத்தினை என்றும்
எங்களின் சுப்பிர மணியெனும் தமிழே
ஏற்றம ளித்தெமை என்றுமே காப்பாய்
எம்முயி ரேபள்ளி எழுந்தரு ளாயே 20



# சேக்கிழார் ஆற்றுப்படை

## அகவல்

தெய்வத் திருநெறித் தேர்ந்துநீ றணிந்து
உய்வுற ஈசனை உளத்தால் பணிந்து
மூவர் முதலிகள் முன்னாள் உரைத்த
தேவா ரந்தனைத் தேனெனப் பொழிந்து
திருவாச கமாம் தேவா மிருதம்
இருசெவி குளிர இனிதாய் மொழிந்து
வந்திடும் தொண்டனே வளர்சைவப் பண்புளாய்!
இந்நாள் உனக்கு ஏற்றது உரைப்பேன்
சார்ந்துள சைவச் சாத்திரம் தோத்திரம்
ஓர்ந்து உணர்ந்திட ஒருவழி யுரைப்பேன் 10
சென்னையி லிருந்து செல்பல வழிகளில்
நன்றெனப் போரூர் நாட்டிய பாதையில்
குன்றத் தூரினைக் கண்டிட விரைக
என்றும் புகழ்பெறும் ஏற்றமும் பெறுக
கண்கள் விரிந்திடக் காணும் வயல்கள் 15
எண்ணிலா எழில்மிகு இயற்கை வளங்கள்
யாவும் காண்பாய் யாதோ இவ்வழி
மேவும் எனநீ வினவுதல் வேண்டா
குன்றத் தூரினைக் குறிக்குமிவ் வறிகுறி
ஒன்றிய உணர்வுடன் உள்ளே விரைந்தால் 20
பாட்டைகள் நான்கு பாங்காய் இணையும்
கூட்டுச்சா லையெனக் குறிக்குமோ ரிடம்வரும்
அந்தநற் பாதையில் அழகாய் நடந்தால்
வந்தவர் தம்மை வரவேற் பதுபோல்
பேரூ ராட்சி பெருமலு வலகம் 25
சீரூர் குன்றத் தூரினைக் காட்டும்
எப்பொருள் வேண்டினும் ஏற்றநல் விலையில்
அப்பொழு தேதரும் அருங்க டைவீதி

அதனையும் கடந்து அப்புறம் சென்ருல்
இதமாய்ப் பேருந்து இணைந்திடும் நிலையம் 30
பெருவீதி சிறுவீதி பேசுது லுக்கத்
தெருவுடன் தச்சத் தெருவுகள் விளங்கும்
டக்டக் டகடக டடட்ட வெனவே
பக்கம் யாவிலும் பற்றிடும் ஒலிகள்
நெசவுத் தொழிலின் நேர்த்தியைக் காட்டும் 35
உசவுத லின்றே ஒருமன தாக
உள்ளே சென்ருல் ஓங்கிய கோபுரம்
வெள்ளை மனத்தரை விரைந்துவ ரவேற்கும்
அருகினி லாங்கே அமைந்தே விளங்கும்
திருக்குளப் பெயரே சூரியபுட் கரணி 40
ஆங்கதில் தூய்மை அமைவுறச் சென்று
பாங்குடன் ஆலயம் பக்தியால் பணிவாய்!
நன்குணர் வடதிரு நாகே சப்புகழ்
இன்றுனக் கதைநான் இனிதாய் உரைப்பேன்
குன்றத் தூரினைக் குவலயம் புகழ 45
அன்றொரு நாளினில் அவதரித் தபிரான்
சோழமன் னவனின் சபைதனில் அமைச்சராய்
அமைந்ததோர் நாளில் ஆங்குறை குடந்தையில்
உமையுடன் ஈசன் உவந்த நாகேசம் 50
தனைதினம் பணிந்தார் தனதுஊ ரினிலும்
நினைந்துளம் உருகி நித்தமும் தொழவே
ஆலய மமைத்து அரனுர் பெயரை
சாலநா கேசராய் சாற்றினுர் ஆதலின்
வடநா கேசமாய் வாழ்த்தினர் யாவரும் 55
திடமாய் பணிந்து திளைப்பாய் பக்தியில்
சேக்கிழார் சிறப்பை சிறிதுரைத் திடுவேன்
ஊக்கமாய் கேட்டே உவப்புடன் செல்வாய்
புகழுறு வைகாசி பூசந் தன்னில்
திகழ்ந்தார் மண்ணில் திசையெலாம் வணங்க 60
வேளாளர் மரபினில் வெள்ளியங் கிரியார்

வேண்டி வரம்பெற வந்துதித் தவராம்
அழகம் மைஈன்ற அருந்தவப் புதல்வன்
அருண்மொழி எனும்பெயர் அமைவுறு செல்வன்
கல்வியிற் சிறந்து கலைகளி லுயர்ந்து 65
நல்லார் புகழ்ந்திட நன்குறை நாளில்
கொடிதனில் புலிதனைக் கொண்டதோர் மன்னன்
துடிப்புடன் புலவரை தேடியே குலவ
முக்கேள் விகளை முறையுடன் எழுதி
அக்கணம் சபைதனில் அறிவித் தானதை 70
மலையினும் கடலினும் உலகினும் பெரிதினை
நிலைபெற உரைப்பவர் நீணில மீதினில்
அருந்தமிழ்ப் புலமை அமைந்தவ ராகும்
அவர்க்கிட மளித்தல் அவைக்கழ காகும்
என்பதால் அன்னவர் எங்குறைந் தாலும் 75
நன்குநாம் உணர்ந்திட நல்வழி ஈதே
நம்வினு இன்றே நாடெலாம் பரவுக
செம்மையாய் உரைத்தால் சீருடன் கொணர்க
என்றே மன்னவன் எங்கும் அனுப்பிட
தினமுமக் கேள்விகள் திசையெலாம் பரவிட 80
ஆன்றோர் அந்நாள் அறிந்துளம் மகிழ்ந்து
சான்றோருடைத்தென சாற்றிய தொண்டை
நாட்டிலும் அஃது நாளும் விரைந்தது
ஏட்டினைக் கண்டோர் எழுதினர் விடைபல
தெள்ளிய பல்லவன் திகைத்துதன் னமைச்சராம் 85
வெள்ளியங் கிரியாரை விடைதரப் பணித்தான்
ஆங்கவர் கண்டு அமைதி யிழந்து
ஈங்கிதன் விடைகள் ஏதெனக் கலங்க
இளைஞர் சேக்கிழார் எடுத்ததைக் கண்டார்
திளைத்தார் மகிழ்விளில் தேர்ந்துணர் விடைகளால் 90
தெய்வப் புலவராய்த் திருப்பெயர் பெற்றவர்
தெய்வப் புலவரின் திருக்குறள் தனிலே
அருந்தே விடைகளை எழுதி அனுப்பினர்

திருவந் தன்றே திகழ்த்தனள் வாழ்வில்
விடைகளைக் கண்டே வியந்த மன்னவன் 95
தடையற இவர்க்கெத் தகுதியும் தரலாம்
அழைத்து வருக அவைக்கென உரைக்க
தழைத்தது சைவம் தரணியி லன்றே
முதலமைச்ச ரென முழுப் பொறுப் பேற்று
நிதமுநற் பணிகள் நிலைபெறச் செய்தார் 100
உத்தமச் சோழப் பல்லவ னென்றெ
அத்தினம் மன்னனும் அளித்தன னொருபெயர்
இன்பச் சுவைகளை ஏகமாய்ப் புகுத்தித்
துன்பச் சுமைதரத் தூண்டுமோர் நூலினை
சிந்தா மணியெனச் செப்பினர் சிலபேர் 105
அந்நாள் மன்னனும் அதில்மூழ் கினனே!
திருத்தொண் டர்களாய்த் திகழ்ந்தவர் பெருமை
அருமையாய் சேக்கிழார் ஆங்கே யுரைத்தார்
இப்பெருங் கதைகள் என்றுமே வாழ
தப்பாமல் காவியம் தரவேண் டுமென்றே 110
பணிவாய் மன்னனும் பகர்ந்திட அவரும்
பணிந்தே புனிதப் பணியென ஏற்றார்
தில்லைக் கூத்தனின் திருவடி தொழுதே
நல்லதோர் சொல்நீ நவின்றிடல் வேண்டும்
ஈசா வென்றே இதயங் கனிந்து 115
நேசமாய் உருக நிமலனார் அருள
உலகெலா மெனவே ஒலித்தது அங்கே
அலகிலா விளையாட் டறிதல்யார் இங்கே
திருத்தொண் டர்புகழ் தீந்தமி ழாலே
உருவா கியதே உலகெலா முய்ய 120
சித்திரைத் திருவா திரைநாள் தொடங்கி
சித்திரைத் திருவா திரைநிறை வாக்கி
அரங்கேற் றந்தனை அரும்பெரும் புலவோர்
நிறைந்த அவைதனில் நிகழ்த்தினார் சேக்கிழார்
பண்புடன் யானைமேல் பாங்குடன் ஏற்றி 125

தொண்டர்சீர் பரவுவார் எனும்பெயர் சாற்றி
சார்ந்துதன் கரத்தால் சாமரம் வீசி
சேர்ந்தனன் சோழனும் சேக்கிழார் புகழில்
தில்லையில் வாழ்ந்தரன் திருவடி சேர்ந்தார்
எல்லையில் புகழால் என்றுமே வாழ்ந்தார் 130
பெரிய புராணப் பெருமை யுரைத்தல்
அரிதே நமக்கது ஆண்டவன் படைப்பு
அத்தகுத் திருமுனி அமைத்துள கோயில்
இத்தினம் அவருமே இணைந்துள கோயில்
அவரைநீ அடைந்தால் ஆறுதல் பிறக்கும் 135
சிவனருள் தானே சித்திக் குமன்றோ?
அவர்நமக் களித்த அரியதோர் நூலில்
இவர்ந்துள அடியார் எத்தனை வகையார்
இறைவனின் திருமுன் இருப்பவர் தமக்குள்
நிறைகுறை யில்லை நெடுநாள் நம்மை 140
உறுத்திடும் சாதி வருணங்களில்லை
திருத்தமாய் ஓதின் தீண்டாமை யில்லை
பதவியின் பெயரால் பகுத்துப் பார்க்கும்
இதமறு செயலும் எங்கணு மில்லை
இப்பெரும் பண்புகள் இணைந்திடற் காகினும் 145
இப்பொழு தேநீ இந்நூல் ஓதுக!
சாற்றிடும் சைவச் சமயப் பண்புகள்
ஏற்றிட சேக்கிழார் இணையடி தொழுக!
வடநா கேசம் வாழ்ந்து
நடமிடும் செந்தமிழ் நலமெலாம் பெறுகவே! 150



**கவிஞர்** நூலை அம்பலவாணரின் திருவடியில் சமர்ப்பிக்கிறார்.

## திருநாகேசுவரம் நாட்டார்,
## திருநாகேசுவர சுவாமி திருக்கோயில்
## அறங்காவலர்

# வாழ்த்துப்பா

செங்குந்தர் குலத்தினில் சிறந்தோங்கும் தலைவனாய்
செல்வமுயர் மன்ன னாகி
சேர்ந்தார்க்கு எந்நாளும் சோர்வின்றி வாழ்தற்கு
தினமருளும் வள்ள லாகி
தங்கிபுக லுற்றோர்க்கு தீஞ்சுவைமாங் கனிபோலே
தாமினிய சொல்லு ரைத்து
தமதுகுலம் தழைத்திடவே தோன்றுமக் கட்செல்வம்
தாம்பெற்று வாழ்வ ளித்து
சங்கமுறு செந்தமிழும் சைவமுறு சிவன்தாளும்
சந்ததமும் நெஞ்சி லுற்று
சமயநெறி யாவிலுமே சற்றேனும் மாறாத
சான்றோராய்ப் புகழு முற்று
இங்கென்றும் வாழ்ந்தெங்கள் இதயத்தி லும் வாழும்
எம்தேவரா சமு தலியார்
என்றுமே வாழவருள் வடநாகே சம்மேவும்
எந்தையே திருநா கேசா!

எடுத்ததோர் காரியம் எதுவாயி னும்மதில்
எப்போதும் நிலைத்தி ருப்பார்
ஏனம் செய்கினும் இடையூறு நேரினும்
எந்நாளும் வெற்றி கொள்வார்
விடுத்திடும் ஆணைகள் வலிமையாய் விளங்கிடும்
வேகமாய் செயல்ந டத்தி
விழியுறங் காமலித் திருக்கோயில் பணிகளே
விரதமாய்க் கொண்டு வாழ்வார்
கடுமைபோல் தோற்றமே காணினும் பலாபோல்
கனிந்திடும் அன்பு உள்ளம்
காலத்தின் சோதனை கண்டதால் பண்பட்டுக்
கடமையில் ஊன்றிச் செல்லும்
தொடுக்குமித் தமிழ்போல நிர்வாக அறங்காவல்
தோய்நாக லிங்கமு தலியார்
சொல்லரும் புகழ்பெற்று வாழ்ந்திட அருளுவாய்
**துலங்குவட திருநா கேசா!** 2

அமைதியே வடிவாக அமர்ந்துவிட் டாலுமது
அளவினை மீறிப் போகும்
ஆவேசம் கொண்டெழுந் தாலுமப் படியேதான்
அதன்விளைவு கடுமை யாகும்
சுமையெனும் காரியம் எனினும்தான் ஏற்றதும்
சுலபமாய் அதைமு டிப்பார்
சூழ்நிலைக் கேற்பவே சாதித்து வாழைபோல்
சேர்ந்தார்க்கு பலன ளிப்பார்
உமையொரு பாகனை உளத்தினுள் தொழுவதால்
ஊர்க்கது தெரிந்தி டாது
உள்ளத்தில் உள்ளதை ஒளிக்காம லுரைத்தே
உயர்அறங் காவல ராகி
குமைகின்ற நெஞ்சிற்கும் குதூகல மளித்திடும்
குப்புசாமி முதலி யார்தாம்
குறையின்றி எதிலுமே நிறைவோடு வாழவருள்
குலவுவட திருநா கேசா! 3

தாமரையின் இலைமேவும் தண்ணீர் போல
　　தானெதிலும் ஒட்டாமல் தனித்து நிற்பார்
சேமமுற நிர்வாகம் செய்ப வற்றை
　　சிறிதேனும் தடையின்றி நடத்தி வைப்பார்
நாமமது சம்பந்த முதலி யாராம்
　　நாடுமிவர் சாந்தமுள்ள அறங் காவலரே
வாமமுறு காமாட்சி வளம ளிக்க
　　வாழ்விப்பாய் எந்நாளும் திருநா கேசா! 4

தழைக்கின்ற பசுமையுறு தருவைப் போலே
　　தானெதையும் ஆர்வமுடன் செய்து வளர்வார்
அழைக்கின்ற போதிலெலாம் வந்து நிற்பார்
　　அடுத்ததொரு காரியங்கள் மேற்கொண் டெழுவார்
விழைந்துவரும் நற்கணேச முதலி யாராம்
　　விளங்குமிவர் இளம்பருவ அறங்கா வலரே
இழைந்துநிற்கும் இவரை நீ வாழ்விப் பாயே!
　　எமையென்றும் காத்தருளும் திருநா கேசா! 5



# சொற்பொருள் விளக்கம்

[எண்: பாடல் எண்]

**நாகேசுவரர் நான்மணிமாலை**

1 சேக்கிழார் தில்லைநடராஜர் முன் நின்று தான் பாடப் போகும் திருத்தொண்டர் புராணத்திற்கு முதலடி எடுத்துத் தரும்படி உள்ளம் உருகி வேண்ட ''உலகெலாம்'' என்ற சொல் விண்ணில் ஒலித்தது.

4 முசுகுந்த சக்ரவர்த்தி வலாசூர யுத்தத்தில் இந்திரனுக்கு உதவிசெய்ய அதற்கு மகிழ்ந்த இந்திரன், விரும்பியதைத் தருவதாகச் சொல்ல மன்னன் இந்திரனிடமிருந்து சிவனுடைய திருவுருவமான விடங்கரைக் கேட்கிறான். இந்திரன் அதைத் தரமனமில்லாமல் ஆறு வடிவங்களை உருவாக்க மன்னன் அவைகளை மறுக்கிறான். ஏழாவதாக உண்மையான விடங்கரைத் தந்து தான் உருவாக்கிய மூர்த்தங்களையும் தருகிறான். முசுகுந்தன் அவைகளைத் தமிழ்நாட்டில் ஏழு திருத்தலங்களில் பிரதிஷ்டை செய்கிறான். இவையே சப்தவிடங்கத்தலங்கள் எனப் புகழ் பெற்ற ஏழுதலங்களாகும். அவை திருநள்ளாறு, திருவாரூர், திருவாய்மூர், திருக்காராயில், திருநாகைக்காரோணம், திருக்குவளை, திருமறைக்காடு.

10 சனகர், சனந்தனர், சனாதனர், சனத்குமாரர் எனும் முனிவர்கள் சிவபெருமானிடம் ஞானவிளக்கம் கேட்க தட்சிணாமூர்த்தியாய் அமர்ந்து சின்முத்திரையால் விளக்கம் தருகிறார்.

ஆதிசேடன் இறைவன் திருநடனச் சிறப்பை திருமாலால் அறிந்து வந்து பணிந்து வேண்டித் திருநடனக் காட்சி பெறுகிறான்.

12 "சிவாயநம" என்ற ஐந்தெழுத்தும் இறைவனின் ஆனந்தத் தாண்டவத் திருவுருவில் அமைந்துள்ளன.

வெண்பா

**சேர்க்கும்துடி சிகரம் சிக்கனவா வீசுகரம்**
**ஆர்க்கும் யகரம் அபயகரம்—பார்க்கிலிறைக்கு**
**அங்கி ஙகரம் அடிக்கீழ் முயலகனார்**
**தங்கும் மகரமது தான்**

13 "ஐம்பெரும் பூதத்து லிங்கம் :-

1 பிருதிவி லிங்கம்—காஞ்சிபுரம்
2 அப்புலிங்கம்—திருவானைக்காவல்
3 தேயுலிங்கம்—திருவண்ணாமலை
4 வாயுலிங்கம்—சீகாளத்தி
5 ஆகாயலிங்கம்—சிதம்பரம்

14 ஐவகை சபைகள். இவையே பஞ்ச அம்பலங்கள் என்று சொல்லப்படுகின்றன.

1 மண்ணம்பலம்—குற்றாலம்
2 தாமிராம்பலம்—நெல்லை
3 வெள்ளியம்பலம்—மதுரை
4 பொன்னம்பலம்—சிதம்பரம்
5 மணியம்பலம்—திருவாலங்காடு

15 ஐந்தொழில் என்பனவே பஞ்சகிருத்தியங்கள் என்று சொல்லப்படுகின்றன. அவை

1 ஆக்கல் 2 காத்தல் 3 அழித்தல் 4 மறைத்தல் 5 அருளல்

ஐம் முகம் என்பன:-

1 ஈசானம் 2 தத்புருடம் 3 வாமதேவம் 4 அகோரம் 5 சத்தியோசாதம்

16 அக்கணிந்து—எலும்புமாலை அணிந்து

23 சிவபெருமான் தருமிக்குக் கவிதை தந்து, அதைக் குற்றம் கூறியதால் நக்கீரனுடன் சொற்போர் புரிந்தார் பாணபத்திரர்க்காக சேரமான்பெருமாள் நாயனாருக்கு திருமுகப் பாசுரம் எழுதினார். தாம் எழுதிய இறையனார் அகப் பொருள் உரைகாண ஊமையை உருகவைத்து எது சிறந்த உரை என்பதை விளக்கினார்.

31 அரவு — அத்தி — சிலந்தி இம்மூன்றும் வழிபட்டு உய்ந்த இடம் சீகாளத்தி

சீ = சிலந்தி; காளம் = பாம்பு. அத்தி = யானை

சகம் ஆள அரசுபெற்ற குரங்கு = முசுகுந்தச் சக்ரவர்த்தி
தரணிபதினாலு முற்ற எலி—மாபலிச்சக்ரவர்த்தி

## காமாட்சி இரட்டை மணிமாலை

4 சிவப்பிரகாச சுவாமிகள் பல தலங்களைத் தரிசித்து வரும்போது குன்றத்தூருக்கும் எழுந்தருளி காமாட்சி யம்மையைப் போற்றிப் பாடியுள்ளார். அவைகளில் ஒரு பாடல்

**நனைமாட்சி மென்கொன்றைத் தாரோன்**
**தரும் இரு நாழி நெல்லால்**
**வினை மாட்சி கொண்டு உயிர் எல்லாம்**
**அளித்தருள் மேன்மையினால்**

**மனைமாட்சி எய்தும் உனக்கே**
**பெருங்கற்பு மாட்சியன்றிப்**
**பினை மாட்சி யார்க்குண்டு ? உலகீன்ற**
**குன்றைப் பெரியம்மையே**

10 ''கா'' என்பது கலைமகளையும் ''மா'' என்பது திரு மகளையும் ''அட்சி'' என்பது கண்களையும் குறிப்பன வாகும். ஆக கலைமகளையும், திருமகளையும் கண்களாகக் கொண்டவள் காமாட்சி.

12 ஆற்றில் அன்னை மணலால் லிங்கம் அமைத்து இறைவனை வழிபடும்போது வெள்ளம் பெருக அதிர்ச்சி யடைந்த அன்னை இறைவனைத் தழுவிக்கொள்ள அந்த லிங்கத்தில் வடு ஏற்பட்டது. அதனால் ''குழையத்தழுவிய அம்மன்'' என்றே அன்னைக்குப் பெயர் ஏற்பட்டது.

15 அன்னையின் அருட்சக்தி ஒவ்வொரு தேவரோடும் இணை யும்போது அதற்கேற்பப் பெயர் பெறுகிறது. அச்சக்திகள் யாவும் மகிஷாசூர வதத்தில் ஒன்று திரண்டன·

பிரம்மன்—பிரஷ்மானி
விஷ்ணு—வைஷ்ணவி
குகன்—கௌமாரி
மகேசன்—மஹேஸ்வரி
ஹரிவடிவம்—வாராஹி
நரசிம்மம்—நரசிம்மி
இந்திரன்—ஐந்திரி
சிவதூது—சிவதூதி

## விநாயகர் திருத்தொகை

வரி 38: அகத்தியர் கையிலிருந்த கரகத்தை விநாயகர் கவிழ்க்க அது காவிரி நதியாக ஓடியது. அகத்தியர் அந்தணச் சிறுவன் வடிவில் வந்திருந்த விநாயகரைக் குட்டுவதற்காகத் துரத்த, அவர் சுயவடிவம் கொண்டு நின்ருர். அதைக்கண்ட குறுமுனி தம்மைத் தாமே குட்டிக்கொண்டதோடு இப்படிக் குட்டிக் கொள்ளும் அடியவர்களுக்கு அருள்புரிய வேண்டும் என்று வேண்டிக்கொள்கிருர்.

வரி 130 : கயாமுகாசூரன் என்ற அசுரன் விநாயகர் போலவே யானைமுகம் படைத்தவனுய்ப் பிறந்து தருக்குற்றுத் திரிகிருன். விநாயகர் அவனை அழிப்பதற்காகப் போர்த் தொடுக்க அவன் எலியாக மாறி ஓடுகிருன். அவர் அவனைப் பிடித்து அடக்கி தனது வாகனமாக ஆக்கிக்கொள்கிருர்.

## சுப்பிரமணியர் திருப்பள்ளியெழுச்சி

9 : கற்கிமுகி என்ற பூதம் நக்கீரரைத் தூக்கிச்சென்று குகையில் அடைத்துவிட ஏற்கனவே அங்கே அடைக்கப்பட் டிருந்தவர்களோடு இவரையும் சேர்த்து ஆயிரம் பேராகிவிட, அத்தனைபேரும் அன்றே பூதத்திற்கு இரையாகிவிடுவர் என்ற நிலை ஏற்படுகிறது. இதைக்கண்ட நக்கீரர் முருகனை நினைந்து ' திருமுருகாற்றுப்படை'' பாட, முருகன் எழுந்தருளி வேலா யுதத்தால் அந்த குகையைப் பிளந்து, பூதத்தைக் கொன்று அனைவரையும் காப்பாற்றுகிருன்.

11 : பொய்யாமொழிப் புலவர் ஈசனைத் தவிர வேறு யாரையும் பாடமாட்டேன் என்று பிடிவாதமாயிருக்க, முருகன் அவர்முன் காட்டுவழியில் தோன்றி முட்டையைப் பாடச்சொல்ல அவரும் பாடுகிருர். ''கோழியை மட்டும் பாடுவேன் என்றவர் முட்டையைப் பாடலாமா?'' என்று கேட்டு, கோழியும் குஞ்சும் போல் ஈசனும் குகனும் என்பதை அவருக்கு உணர்த்தி மறைகிருன் முருகன். புலவர் முருகனைப் பாடுகிருர். □ □

நாடகக் காவலர் ஆர். எஸ். மனோகரின் வெற்றி நாடகங் களான 'பரசுராமர்' 'இந்திரஜித்' இவ்விரண்டும் கவிஞரின் சிருஷ்டி களே ஆகும்.

குன்றத்தூர் பாரதி இலக்கிய மன்றத்தின் தலைவராகவும் இருந்து வரும் கவிஞர் சிறந்த சமயச் சொற்பொழிவாளரும் ஆவார்.

கவிஞராகவும், எழுத்தாளரா கவும், சொற்பொழிவாளராகவும் விளங்கும் இவரது சமயச் சொற் பொழிவுகளைப் பத்தாண்டுகளுக்கு முன்பே கேட்டுப் பாராட்டினர் தருமை ஆதீனம் குருமகா சந்நி தானம்.

1980-ம் ஆண்டின் இறுதியில் வடதிருநாகேசுவரம் அருள்மிகு நாகேசுவரசுவாமி திருக்கோயிலின் ஆஸ்தான கவிஞராக ஏற்கப்பட் டார்.

தாம் பங்கேற்றிருக்கும் ஆஸ் தானத்தின் பேரரசாம் நாகேசன் மீது கவிஞர் பாடிய இக்கவிதாஞ் சலி 1981 மார்ச் 20ல் அரங் கேற்றப்பட்டு, வெளியிடப்பட்டது.

